# சிவலிங்கமஹத்வம்

ஆசிரியர்

**ஸ்ரீமதி ஆண்டாளம்மாள்**

பெங்களூர்

வெளியீடு

**ஸ்ரீமத் நம்பியாண்டார் நம்பி ஆச்ரமம்**

திருமலை.

# நூல் விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | சிவலிங்க மஹத்வம் |
| ஆசிரியர் | : | ஸ்ரீமதி ஆண்டாளம்மாள் |
| பொருள் | : | சிவலிங்கத்தின் பெருமை |
| மொழி | : | தமிழ், ஸம்ஸ்க்ருதம் |
| எழுத்து | : | க்ரந்தம், தமிழ் |
| பக்கம் | : | 68 |
| எழுத்தளவு | : | 12 புள்ளிகள் |
| அளவு | : | 1/8 size |
| தாள் | : | மேப்லித்தோ இயற்கைவண்ணம் |
| முதல் பதிப்பு | : | 1913 |
| இரண்டாம் பதிப்பு | : | 30-04-09 |
| அச்சிட்டோர் கணிணி வடிவமைப்பு | : | ஸ்ரீ துர்கா ஆய்வு நிறுவனம், நயினாரகரம், தென்காசி. |
| வெளியீடு | : | ஸ்ரீமத் நம்பியாண்டார் நம்பி ஆச்ரமம், திருமலை. |

# இந்நூல்

திருமலை, ஸ்ரீமத் நம்பியாண்டார்நம்பி ஆச்ரம நிறுவனர்

அமரர், சிவஸ்ரீ. இராம.முத்துச்சாமி குருக்கள் நினைவாக

அவரது முழுமுயற்சியால் எழுந்த அவருக்கு சொந்தமான

அருள்மிகு சிந்தாமணி விநாயகர்திருக்கோயில்

மஹாகும்பாபிஷேகப் பெருவிழா நன்னாளில்

சிங்கப்பூர், அருள்மிகு வீரமாகாளியம்மன் திருக்கோயில்

மேலாண்மைக் குழு உறுப்பினரும், தருமசீலருமான,

ஸ்ரீ **R. செல்வக்குமார்** அவர்களது பொருளுதவியுடன்

பிள்ளையார்பட்டி, அருள்மிகு கற்பகவிநாயக பூஜகர்,

சிவநெறிக்கழக ஸ்தாபகர், சிவநெறிச்செம்மல்,

சிவாகம ரத்னாகரம், விகாஸரத்ன.

டாக்டர் சிவஸ்ரீ. **K. பிச்சை சிவாசார்யார்** அவர்களது

அருட்கரங்களால் வெளியிடப் பெற்றது

ஸ்ரீ விரோதி வருஷம்

சித்திரை மாதம் 15ம் நாள்

30. 04. 09 வியாழக்கிழமை

திருமலை.

# பதிப்புரை

சிவனொடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை
அவனொடொப்பார் இங்கு யாவரும் இல்லை
புவனங் கடந்திங்கு பொன்னொளி மின்னும்
தவனச் சடைமுடித் தாமரையானே.

– ஸ்ரீமத் திருமூலர் பெருமான்

பெருங்கருணைத் தடங்கடலாகிய பெருமானின் திருவருட் துணையோடும், எனது குருநாதர் சிவஸ்ரீ. முத்துச்சாமி குருக்கள் அவர்களின் அருளாசியோடும் நடைபெறும் திருமலை அருள்மிகு சிந்தாமணி விநாயகர் திருக்கோயிலின் மஹாகும்பாபிஷேக விழா நன்னாளில்" சிவலிங்க மஹத்வம்" என்ற நூலை வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

திருக்கோயிலை முறையாக நிர்வாஹம் செய்வதற்கான அனைத்து ஆலோசனைகளையும் வழங்கி, சிங்கப்பூருக்கே சிவகாம ஆசானாக விளங்கிய சிவஸ்ரீ. முத்துச்சாமி குருக்கள் அவர்களை இத்தருணத்தில் வணங்கி மகிழ்கிறேன்.

சைவப் பெருமக்கள் யாவரும் வாழ்நாள் முழுதும் சிவபெருமானை வழிபட வேண்டும் என்பது விதி. அவ்வழிபாடானது அப்பெருமானது பெருமையை நன்குணர்ந்து செய்யப்பட்டால் பெரும்பயன் விளையும் என்பது உறுதி.

அவ்வகையில் சிவபெருமானின் சிவலிங்க வடிவத்தின் பெருமையை நன்கு உணர இந்நூல் பெரிதும் உதவும்.

சைவப் பெருமக்கள் யாவரும் இந்நூலைப் படித்து, சிவபெருமானின் பெருமையை நன்குணர்ந்து, வழிபட்டு சிவானந்தப் பெருவாழ்வு வாழப் ப்ரார்த்திக்கிறேன்.

நூலை நல்ல முறையில் வெளிவர உதவிய திருப்பரங்குன்றம், ஸ்ரீ ஸ்கந்தகுரு வித்யாலத்தின் சிவாகம ஆசிரியர், சிவாகமபாஸ்கர சிவஸ்ரீ. G.கார்த்திகேயசிவம் அவர்களுக்கும், நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த தென்காசி, நயினாரகரம், ஸ்ரீதுர்கா ஆய்வு நிறுவனத்தாருக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்,

**R. செல்வக்குமார்,**
உறுப்பினர் மேலாண்மைக் குழு,
ஸ்ரீ வீரகாளியம்மன் ஆலயம்,
சிங்கப்பூர்.

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

சைவஸமயிகள் யாவரும் சிவதீக்ஷை பெற்றுக் கொண்டு, விபூதி, ருத்ராக்ஷம் முதலிய சிவ சின்னங்களை தரித்துக் கொண்டு, சிவபூஜையை வாழ்நாள் முழுவதும் செய்ய வேண்டும் என்பது சிவாகமவிதி. அவற்றுள் விபூதி, ருத்ராக்ஷ மஹிமையை விளக்கி பல்வேறு நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. ஆனால் சிவலிங்கத்தின் மஹத்வத்தை மட்டும் தனியே விளக்கி இதுவரை நூல் எதுவும் செய்யப்படவில்லை என்று எண்ணுகிறேன்.

அக்குறையை நீக்கும் வண்ணமாக வேதம், சிவாகமம், புராணம், இதிஹாஸம், திருமுறை ஆகியவற்றுள் காணப்படுகின்ற சிவலிங்க மஹத்வத்தைப் பற்றி பெங்களூரைச் சேர்ந்த ஸ்ரீ மதீ ஆண்டாளம்மாள் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவை J .M நல்லசாமிப் பிள்ளை அவர்கள் அதை 1913 ஆண்டு நூல் வடிவமாக வெளியிட்டுள்ளார்கள் என்பதை, திருச்செங்கோடு. சிவாகம சிரோமணி, முதல் குருத்வ ஸ்தானீகம் சிவஸ்ரீ. M.S.S.S. விஜய ஸுப்ரஹ்மண்ய குருக்கள் அவர்கள் கொடுத்த, ஒரு நூலின் நடுப்பகுதியில் இருப்பதைக் கண்டு அதை மீண்டும் வெளியிட்டால் நன்றாக இருக்கும் என்று எண்ணினேன்.

இந்நிலையில் சிங்கப்பூர் அருள்மிகு வீரகாளியம்மன் ஆலயத்தின் முன்னாள் தலைமை அர்ச்சகரும், திருமலை ஸ்ரீமத் நம்பியாண்டார் நம்பி ஆச்ரமத்தின் ஸ்தாபகருமான, சிவநெறிச் செம்மல் அமரர் - சிவஸ்ரீ. முத்துச்சாமி குருக்கள் அவர்களால் கட்டப்பட்ட அருள்மிகு சிந்தாமணி விநாயகர் ஆலயத்தின் இரண்டாவது மஹாகும்பாபிஷேக விழா நடைபெறும் நன்னாளில் [30. 04. 09] நூல் ஒன்றை வெளியிட வேண்டும் என்று கூறினார் சிங்கப்பூர் நண்பர். உயர்திரு. R. செல்வக்குமார் அவர்கள்.

அவர்கள் அளித்த நிதியுதவி கொண்டு அருள்மிகு சிந்தாமணி விநாயகர் ஆலயத்தின் புனராவர்த்தன ஜீர்ணோத்தாரன அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேக விழாவில் இந்நூல் வெளிவருவது மிகுந்த மனமகிழ்வைத் தருகிறது.

இந்நூலுள் ஆசிரியர் அவர்கள் சிவலிங்கம் என்ற சொல்லுக்கான பொருளை சாஸ்த்ர மேற்கோளுடன் அழகாக விளக்குகிறார்.

சிவலிங்க வழிபாட்டைப் பற்றிய பல்வேறு கேள்விகளுக்கு விளக்கம் தரும் வகையில் முதலில் சிவலிங்க வழிபாடானது வேதங்களிலேயே கூறப்பட்டுள்ளது என்றும், எனவே வேதம் என்று உண்டோ அன்றே சிவலிங்க வழிபாடும் உண்டு என்பதை நன்றாக விளக்குகிறார்.

பின்னர் லிங்க சப்தத்தின் தாத்வர்த்தத்தை பல ப்ராமணங்களுடன் கூறுகிறார். அவற்றுள் ஸ்ரீமத் வருண பத்ததி ஆசார்யர், ஸ்ரீமத் வருண சிவாசார்யரின் விளக்கம் மிகவும் அருமையாக உள்ளது.

உலகம் முழுமையும் சிவசக்தியின் வடிவம் என்பதை விளக்கும் உபநிடதம் மற்றும் சிவபுராணங்களின் விளக்கம் எண்ணி எண்ணி இன்புறும் வண்ணமாக அமைந்துள்ளது.

மச்சரங்கமும் மலரவனங்கமும்
வச்சிராங்கமுமில்லை மண்மீதிலே
யச்செல்லாம் லிங்காங்க பகாங்கமே
பிச்சர்காளெம் பிரானல்லதில்லையே - என்ற ஞானாவரண விளக்கப் பாடல் சிவலிங்கத்தின் பெருமையைப் போற்றுகின்றது.

வாக்கிற்கும், மனதுக்கும் அப்பாற்பட்டு விளங்கும் சிவபெருமான் பக்தர்கள் வழிபடுவதற்காகவே பல்வேறு வடிவம் கொண்டு அருள் புரிகின்றார். அப்பெருமானை ஏதாவது ஒரு உருவில் வழிபடல் அவச்யம் என்பதையும் அவற்றுள் சிவலிங்க வழிபாடு மிகவும் சிறந்தது என்றும் விளக்குகிறார்.

எந்த ஒரு பிணியும் நீங்குவதற்கு மணி, மந்த்ரம், ஔஷதம் என்ற மூன்று வழிகளைப் பின்பற்றுவது நமது பண்பாட்டின் வழக்கம். அவ்வகையில் சைவர்களுக்கு மணி, சிவலிங்கம், மந்த்ரம், பஞ்சாக்ஷரம், ஔஷதம், விபூதி என்ற சங்கர ஸம்ஹிதையின் வாக்யம் அருமையிலும் அருமை.

பின்னர் லிங்கங்களின் பேதங்களும், ஷடாதார க்ஷேத்ரங்கள், முக்தி ஸ்தலங்கள், சர்யா, க்ரியா, யோக, ஞான பாதத்தைப் பின்பற்றுபவர்கள் சிவலிங்கத்தை வழிபடும் முறை, மற்ற தெய்வ வழிபாட்டினும் சிவலிங்க பூஜை சிறந்தது என்பது போன்ற விஷயங்கள் இனிது விளக்கப்படுகிறது.

சிவலிங்க பூஜை செய்தால் என்னென்ன பலன் ஏற்படும் என்று சொல்வதை விட, சிவலிங்கத்தைப் பூஜை செய்தவர்கள் எந்தவிதமான பலனை அடைந்தார்கள் என்பதை விளக்குதல் சிறப்பு என்ற வகையில் சிவலிங்க பூஜா பலனை விளக்கி இருப்பது அருஞ்சிறப்பு.

பின்னர், ஆத்மார்த்த பரார்த்த லிங்கங்கள், பஞ்ச ஸாதாக்யங்கள், பூஜையின் பிரிவுகள், உபசார வகைகள், ஆகியவை விளக்கப்படுகின்றது.

பாத்யம் ஆசமனம் முதலியவற்றின் ஞானார்த்தங்கள் பூஜை செய்வோறுக்கு மிகவும் பயனுள்ளதாக அமையும்.

அந்தர்யாக பூஜையின் விளக்கத்தோடு நூலை நிறைவு செய்கிறார் ஆசிரியர்.

சிவலிங்க பூஜைக்குச் சமமான தர்மம் மூவுலகிலும் இல்லை என்ற சிவாகம வாக்யத்திற்கு விளக்கம் போல் அமைந்துள்ளது இந்நூல்.

சைவ ஸமயிகள் யாவருக்கும் இந்நூல் சிறந்த ஒரு பொக்கிஷமாக அமையும் என்பதில் ஐயமே இல்லை.

இவ்வரிய நூலை வெளியிடுவதற்கான நிதியுதவி நல்கிய ஸ்ரீ. R.செல்வக்குமார் அவர்களுக்கு, இது போன்ற இன்னும் பலப்பல அறப்பணிகளைச் செய்வதற்கான நீண்ட ஆயுள், நல்லாரோக்யம், பொருட்செல்வம் ஆகியவை உண்டாக எல்லாம் வல்ல இறைவனைப் ப்ரார்த்திக்கிறோம்.

பேரன்புடன்,
சிவஸ்ரீ. **G. கார்த்திகேய சிவம்**
ஸ்ரீ ஸ்கந்த குரு வித்யாலயம், திருப்பரங்குன்றம்.



ஸ்ரீகற்பக விநாயகர் துணை


## SIVASRI. K. PITCHAI KURUKKAL

*Chief Priest, Sri Karpaga Vinayakar Temple, Pillayarpatti.*
*Principal, Karpaga Vinayakar Veda Agama Vidhyalayam*
*Founder, Sivaneri Kazhakam, Pillayarpatti –630 207,*
*Sivaganga District, Tamilnadu, South India.*


---

# வாழ்த்துரை

வரலாற்றுப் புகழ்மிக்க சிவகங்கை மாவட்டத்தில் அழகிய சிற்றூர் திருமலை. அங்கு நம்பியாண்டார் நம்பிக்கு ஒரு ஆச்ரமம் அமைத்து சைவப்பயிர் வளர்த்த பெரியார் சிவஸ்ரீ முத்துச்சாமி குருக்கள் அவர்கள். புதல்வர்கள் இப்பணியை நன்கு செய்து வருகிறார்கள். நமது சிவநெறிக்கழகத்தின் துணைத்தலைவராகவும் வழிகாட்டி நல்வழிப்படுத்தியவர்களுன் ஒருவராகவும் விளங்கிய சிவஸ்ரீ குருக்கள் அவர்கள் சிங்கப்பூரின் புகழ்மிக்க வீரமாகாளியம்மன் திருக்கோவிலின் தலைமை குருக்களாக பல ஆண்டுகள் தொண்டு செய்து வந்தவர்.

சிவபூஜையையும், சிவதீக்ஷையையும் சைவ உலகம் நன்கு உணரச் செய்வதற்கு இவர் செய்த பணிகள் போற்றுதற்கு உரியது. இவருடைய முழு முயற்ச்சியில் எழுந்த அருள்மிகு சிந்தாமணி விநாயகர் திருக்கோயில் மஹாகும்பாபிஷேக விழாவும் அதனையொட்டி "சிவலிங்க மஹத்வம்" என்ற நூல் வெளியீடும் செய்வது குறித்து மிக்க மகிழ்ச்சி. சிவலிங்கத்தில் சிவபெருமானை ஆராதனம் செய்வது மிகவும் சிறப்பானதாகும். அதுவும் சிவலிங்கத்தின் மஹிமையை உணர்ந்து செய்யப்படும்போது மிகவும் சிறப்பானதாக அமையும் என்பதில் ஐயமில்லை. அவ்வகையில் சிவலிங்கத்தின் மஹிமையை உணர இந்நூல் பேருதவியாக இருக்கும். அனைவருக்கும் பயன்தர வல்ல

இதுபோன்ற செயல்கள் நடைபெற்றுக் கொண்டே இருக்க வேண்டும்.

சிலமாதங்களுக்கு முன் ஹவாய் ஆதீனம் ஸ்ரீபோதிநாத சுவாமிகளை சென்னையில் சந்திக்க நேர்ந்தது. அப்போது நமது அன்பிற்கினிய கார்த்திகேய சிவமும் உடன் இருந்தார். அவரிடம் இருந்த சைவ சமய பழம் நூல்களின் பட்டியலை பார்த்து வியந்தோம். உண்மையில் நமது கார்த்திகேய சிவம் சைவ உலகிற்கு கிடைத்த அரிய சொத்து. இளைய தலைமுறைகள் சைவப்பயிர் வளர்க்க பல அரிய வெளியீடுகளை தந்த வண்ணம் உள்ளார். இவருடைய அரிய பல முயற்சிகளுக்கு சிங்கப்பூர் அருள்மிகு வீரமாகாளியம்மன் திருக்கோயில் தலைவர் அவர்கள் மற்றும் நிர்வாகத்தினர் திரு. செல்வக்குமார் ஆகியோரின் பேருதவியும் போற்றுதற்கு உரியதாகும்.

மஹாகும்பாபிஷேக விழா இனிது நடைபெறவும், இதுபோன்று இன்னும் பலநூல்கள் வெளிவரவும், எல்லோருக்கும் எல்லா நலன்களும் உண்டாகவும் எல்லாம் வல்ல ஸ்ரீகற்பக விநாயகரைப் பிராத்திக்கிறோம்.

**K. பிச்சை குருக்கள்**
பிள்ளையார்பட்டி.

*Ph: 0091 (0)4577-264275. H/P:00919443362320,984246*
Website:www.pitchaianna.com, e-mail:pitchaianna@gmail.com

சிவமயம்
ஸ்ரீவீரமாகாளியம்மன் துணை

வியாகரண சிரோமணி

**ஸ்ரீ தெ. ராஜேஷ் என்ற ஸோமஸுப்ரஹ்மண்ய பட்டர்**

தலைமை அர்ச்சகர், ஸ்ரீ வீரமாகாளியம்மன் திருக்கோவில்,
சிங்கப்பூர்.

---

# வாழ்த்துரை

நமது ஆலயத்தின் தலைவர் உயர்திரு என்.ஆர்.கிருஷ்ணன் அவர்களது குமாரரும், மேலான்மைகுழு உறுப்பினருமாகிய திருவாளர் ஆர். செல்வக்குமார் அவர்களது முயற்சியில், திருமலை நம்பியாண்டார் நம்பி ஆசிரமத்தில் எழுந்தருள்புரியும் அருள்மிகு சிந்தாமணி ஆலயத் திருப்பணிகள் நிகழ்தப்பெற்று கும்பாபிஷேக விழாவும் அதனையொட்டி சிவலிங்க மஹத்வம் என்ற நூல் வெளியீடும் செய்ய இருப்பது குறித்து மகிழ்ச்சி.

ஸ்ரீமத் நம்பியாண்டார் நம்பி ஆச்ரமத்தின் ஸ்தாபகர் அமரர் சிவஸ்ரீ இராம. முத்துச்சாமி குருக்கள் அவர்கள் நமது ஆலயத்தில் சுமார் 17 ஆண்டுகள் தலைமை அர்ச்சகராக பணிபுரிந்து தொண்டாற்றியவர். நமது ஆலயம் மட்டுமின்றி சிங்கப்பூர் ஆலயங்கள் அனைத்தின் முறையான செயல்பாட்டுக்கும் வித்திட்டு வழிகாட்டியவர் என்றால் அது மிகையாகாது. அவரது மேல்கொண்ட ஆழ்ந்த பக்தியினால், அவரது வழிகாட்டலின் வண்ணம், அவரால் எழுப்பப்பட்ட ஆலயத்தின் மஹாகும்பாபிஷேகத்தை ஏற்று நடத்துகிறார் நமது ஆர். செல்வக்குமார் அவர்கள்.

மஹாகும்பாபிஷேக விழா நன்கு நடைபெறவும், சிவலிங்க மஹத்வம் உலகெங்கனும் பரவவும், எல்லா வல்ல அன்னை ஸ்ரீவீரமாகாளியம்மனது சரணாரவிந்தங்களை மனம், மெய், மொழிகளால் போற்றிப்பணிந்து உளமாற வாழ்த்துகிறோம்.

அன்புடன்

**தெ. ராஜேஷ் சிவம்**

சிவமயம்

ஸ்ரீகுருப்யோ நம:

கந்தன் பாதம் கனவிலும் துணை செய்யும்

சிவாகம சிரோமணி, சிவாகம கலாநிதி
**சிவஸ்ரீ K. ராஜா பட்டர்,**
முதல்வர்,
ஸ்ரீ ஸ்கந்தகுரு வித்யாலயம்,
திருப்பரங்குன்றம்.

---

# அருள் வாழ்த்துரை

அருளே வடிவாக விளங்கும் அண்ணல் சிவபெருமானின் திருவருட் துணையுடன் நடைபெறும், திருமலை ஸ்ரீமத் நம்பி ஆண்டார் நம்பி ஆச்ரமத்தில் எழுந்து அருள்பாலிக்கும் அருள்மிகு சிந்தாமணி விநாயக ஆலய மஹாகும்பாபிஷேக விழாவில் சிவலிங்க மஹத்வம் என்ற நூல் வெளியிட இருப்பது குறித்து மிக்க மகிழ்ச்சி.

ஸ்ரீமத் நம்பி ஆண்டார் நம்பி ஆச்ரமம் மர்றும் சிந்தாமணி விநாயகர் ஆலயத்தின் ஸ்தாபகரும் சிவாகம பண்டிதருமான அமரர் சிவஸ்ரீ இராம. முத்துச்சாமி குருக்கள் அவர்கள் நமது சமயத்திற்கு ஆற்றியுள்ள பணிகள் மிகவும் போற்றற்குறியனவாகும். அவர்கள் மறைந்தாலும் அவர்கள் புகழ் பரப்பும் வண்ணமாக அவர்களது ப்ரிய சீடரும், போற்றற்குறியவரும், சிங்கப்பூர் அருள்மிகு வீரமாகாளியம்மன் ஆலயத்தின் மேலான்மைக்குழு உறுப்பினருமாகிய உயர்திரு ஆர். செல்வக்குமார் அவர்களது சீரிய முயற்சியில், சிவஸ்ரீ இராம. முத்துச்சாமி குருக்கள் எழுப்பிய ஆலயத்தின் மஹாகும்பாபிஷேகம் நடைபெறுவது, குருவின் பெருமைக்கும், சீடரது குருபக்திக்கு நல்லதொரு சான்றாகவும் அமைந்துள்ளது.

சிவம் பெருமைக்கும் சீலராக விளங்கிய சிவஸ்ரீ இராம. முத்துச்சாமி குருக்கள் அவர்களது சொந்த முயற்சியில் உருவான அருள்மிகு சிந்தாமணி விநாயகர் ஆலயத்தின் மஹாகும்பாபிஷேக விழாவில் சிவலிங்க மஹத்வம் என்ற நூல் வெளியிடுவது மிகவும் பொருத்தமாக அமைந்துள்ளது.

கும்பாபிஷேக விழா இனிது நடைபெறவும், விழாமலர் சிறக்கவும், ஏற்பாட்டாளர் உயர்திரு ஆர். செல்வக்குமார் அவர்கள் இதுபோன்று பலப்பல அறப்பணிகள் செய்து வாழ்வாங்கு வாழவும் திருப்பரங்கிரிதனில் கோயில் கொண்டருளும் எல்லாம் வல்ல ஐயன் தெய்வானை மணாளன் முருகப்பெருமானின் திருவடிக் கமலங்களை வேண்டி வணங்கி வாழ்த்துகிறோம்.

பேரன்புடன்

**எஸ்.கே. ராஜாபட்டர்**

திருப்பரங்குன்றம்.

சிவமயம்
ஸ்ரீவீரமாகாளியம்மன் துணை

பெறுநர் :
**K. கார்த்திகேய சிவம்** அவர்கள்,
செயலர், ஸ்ரீ அகோர சிவசார்ய டிரஸ்ட்,
சென்னை.

---

# வாழ்த்துரை

அன்புடையீர்,

வணக்கம். எல்லா வல்ல இறைவன் திருமுதுகுன்றத்தீசன் திருவருளினாலும், ஸ்ரீவீரமாகாளியம்மன் திருவருளினாலும் நம் நினைவில் வாழும் தெய்வம் சிவஸ்ரீ இராம. முத்துச்சாமி சிவாச்சார்யார் அவர்களால் நிறுவப்பெற்ற திருமலை, ஸ்ரீமத் நம்பி ஆண்டார் நம்பி ஆச்ரமத்தில் எழுந்து அருள்பாலிக்கும் அருள்மிகு சிந்தாமணி விநாயகர் ஆலய மஹா கும்பாபிஷேக விழா நடைபெறுவது குறித்து மிக்க மகிழ்ச்சி.

நம் அன்பிற்கினிய சிங்கப்பூர் ஸ்ரீவீரமாகாளியம்மன் ஆலய அறங்காவலர் திருவாளர் ஆர். செல்வக்குமார் அவர்கள் முன்னின்று திருப்பணிகள் செய்து, மஹாகும்பாபிஷேக விழாவில் "சிவலிங்க மஹத்வம்" என்ற நூல் வெளியிடுவது மிகவும் சிறப்பானதாகும்.

அன்பர்கள் கும்பாபிஷேக மலரைப் படித்துப் பயனுறவும், எல்லா இன்பங்களையும் பெறவும், திருவாளர் ஆர். செல்வக்குமார் அவர்கள் மேலும் பல திருப்பணிகள், அறப்பணிகள் செய்யவும் எல்லாம் வல்ல இறைவனை ப்ராத்திக்கிறேன்.

தங்களன்புள்ள

**ந. கல்யாணராம சிவாசார்யர்**

விருத்தாச்சலம்
10.04.09

# நூன்முகம்

"சிவஞானிகள் பாவனையுற்றது சிவலிங்கம்''

அகஸ்தியமகாமுனிவர் இமாசலத்தினின்று தென்திசைக் கண்ணதாகிய பொதியமலை நோக்கிச் செல்லும் வழியில் விஷ்ணுஸ்தலமாகிய திருக்குற்றால நகரம் எதிர்ப்பட்டது. அங்கே சிவநாமங்களை உச்சரித்துக்கொண்டு வந்த அம்முனிவரைக் கண்ட அளவிறந்த வைஷ்ணவப் பிராமணர்கள் தம் பகைவரைக் கண்டு பதைபதைப்பவர் போலக் கோபங்கொண்டு விபூதி ருத்திராக்ஷங்களையும் சிவபெருமானையும் தூஷித்து நீ இங்கே செல்லுதல் தகாதென்று அவரைத் தடுக்க, அவர் நீவிர் இங்கியிருப்பதை அறியேன் என்று யாதும் அறியாதவர் போலக் கூறி மீண்டு போய் விஷ்ணுபக்தரைப் போலப் பாகவத வடிவம் பூண்டு பின்னும் அவ்வைஷ்ணவரிருந்த விடஞ்சென்று அவர்கள் செய்த நமஸ்காராதி வழிபாடனைத்தையும் நாராயணர்க்குப் பிரீதி ஆகுக என்று கூறிக்கொண்டு அவ்விஷ்ணுவாலயத்தினுள்ளே புகுந்து நம் பெருமானுக்குப் பூசை செய்ய என் மனம் விரும்புகின்றது, திருமஞ்சன முதலிய கொணர்க என்று அவர்களுக்கு ஆஞ்ஞாபித்துப் பின்னர் இவரை அர்ச்சிக்கும் முறையைப் பாருங்கள் என்று உரைத்து, சிவபாவனையோடு விஷ்ணுவின் திருமுடியின் கண்ணே தமது திருக்கரத்தை வைத்துக் "குறுகு குறுகு'' என்று இருத்தி அக்கினியிலிடப்பட்ட மெழுகு போலாக்கிச் சிவலிங்காகாரமாகச் செய்து வழிபட்டுப் பூசித்தார் என்றும், அதனைக் கண்டு தம்மோடு எதிர்த்த பிராமணர்களை எல்லாம் தொலைத்தார் என்றும் ஸ்காந்தபுராணம் கூறுகின்றது.

காஞ்சிபுரத்தின்கண்ணே நூற்றுப்பதினெட்டு உருத்திரர்களால் வழிபடப்பட்ட நூற்றுப் பதினெட்டுத் திருத்தளிகளுள்ளே திருமேற்றளி என்னும் திருத்தளி ஒன்றுள்ளது. திருமேற்றளி என்னும் இந்த ஸ்தலத்திலே முதன்முதற் கோயில்

கொண்டருளிய சர்ப்பசயனராகிய நாராயணரை வைஷ்ணவர்கள் தங்கள் பாஞ்சராத்திராகம விதிப்படி அர்ச்சித்து வழிபட்டு வந்தார்கள். இங்ஙனம் வழிபட்டு வரும்போது, இருபத்தெட்டாவது கலியுகத்திலே வைவசுவதமநுவந்தரத்திலே திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் வாத்தியங்கள் முழங்க முத்துச் சிவிகையின்மேற் கொண்டருளித் திருமேற்றளியைச் சமீபிக்குங்கால், அங்குள்ள வைஷ்ணவர்கள் அவ்வாலயத்தில் எழுந்தருளியிருந்த நாராயணரையுற்று, "சுவாமி உள்ளே எழுந்தருளியிருக்கிறார்; தரிசனஞ் செய்யலாமே" என்று அன்புடன் சொல்பவர் போல் வன்கண்மையோடு திருஞானசம்பந்த மூர்த்திநாயனாருக்கு விஞ்ஞாபனஞ் செய்ய, அச்சூதைத் திருவருளால் உணர்ந்து கொண்ட பரமாசாரியசுவாமிகள் "உள்ளே எழுந்தருளிய நாராயணர் சிவலிங்கமாகுக" என்னும் பாவனையோடு தமிழ்வேதத்தைப் பாடியருளினார். உடனே நாராயணர் சிவலிங்கரூபமாதலாகிய சிவசாரூப்பியமுற்றாரென்பர். வைஷ்ணவர்கள் அவ்வாலயத்தினுள்ளே புகுந்து பார்த்த போது நாராயணர் சிவலிங்கவடிவமாயிருத்தல் கண்டு, மனமாழ்கி அவ்விடம் விட்டுப் பெயர்ந்து போயினார். இங்ஙனம் விஷ்ணு சிவசாரூப்பியமுற்ற கதையைக் காஞ்சிப்புராணத்துத் திருமேற்றளிப் படலத்திற் காண்க.

பாண்டியராசன் வேட்டையாடி இளைத்து வனத்தில் ஓரிடத்தில் தங்கி, ஸ்நான முதலிய செய்த பின்னர்ச் சிவலிங்க தரிசனஞ் செய்யாது போசனஞ் செய்யும் வழக்கமின்மையால், வனத்தின்கண்ணே எங்காயினும் சிவலிங்கம் இருக்கின்றதோ பார்த்து வருவீர்களாக என்று மந்திரி முதலாயினோருக்கு ஆக்ஞை செய்தானாக, அவர்கள் எங்கும் தேடிச் சிவலிங்கம் ஒன்றும் காணப்படாமையால், மந்திரி இதற்கு உபாயம் ஒன்று செய்குதும் என்று ஆலோசித்து, குதிரையின் வாயிலே காணமிட்டுக் கட்டப்படும் தோற்பையினுள்ளே மணலை உள்ளுறுத்தி ஓரிடத்திற்கவிழ்த்து, அதன்மேல் ஆடை, ஆபரணம், மாலை,

சந்தனம் முதலிய சாத்தி அலங்கரித்துவிட்டு, அரசனிடஞ்சென்று சிவலிங்க தரிசனஞ் செய்ய வரலாமே என்று அறிவுறுப்ப, உத்த மோத்தம பத்தியிற் சிறந்த பாண்டியராசன் சென்று அவ்வுண்மை உணராது சிவலிங்கப் பெருமான் இவரே என்னும் மெய்ஞ்ஞானக் கருத்தோடு வழிபட்டுப் போசனஞ் செய்து தன் நகரம் அடைந்தான். அங்ஙனஞ் செல்லுங்கால், மந்திரியின் ஆஞ்ஞாப்பிரகாரம் வேலைக்காரர் தோற்பையைப் போயெடுக்க முயன்றபோது, அது சிவலிங்கமாய்ப் பூமியை ஊடுருவி நின்றது. இவ்வுண்மை நோக்கியே மாணிக்கவாசகசுவாமிகள் "மொக்கணியருளிய முழுத்தழன்மேனி, சொக்கதாகக்காட்டிய தொன்மையும்'' என்று அருளிச் செய்தார். "மொக்கணி'' என்பது தோற்பை.

இங்ஙனம் திருவாப்புடையார் கோயிலிலே ஓர் அரசன் பொருட்டு நிறுத்தப்பட்ட ஆப்பானது சிவலிங்கரூபமாயதென்றும், திருக்கன்றாப்பூரிலே கன்று கட்டும் தறியைச் சிவலிங்கவடிவமாகக் கொண்டு பூசித்த ஓர் பிராமணப் பெண்ணின் பொருட்டு அத்தறியானது சிவலிங்கரூபமாயிற்று என்றும் புராணங்கள் கூறுகின்றன.

இங்ஙனம் அகஸ்தியர், திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் முதலிய மகான்களாற் சிவபாவனையோடு வழிபட்டன யாவும் சிவலிங்க ரூபமாயிருத்தலினாலன்றோ "சிவஞானிகள் பாவனையுற்றது சிவலிங்கம்'' என்று கூறப்பட்டுள்ளது. பசுவினிடத்து யாண்டும் வியாபித்துள்ள பால் அதன் மடிவாயிலாகத் தோன்றுமாறு போல, விறகில் அக்கினிபோன்றும், எள்ளில் எண்ணெய் போன்றும், வறந்த நதியில் ஜலம் போன்றும், சமஸ்தப் பிரபஞ்சங்கடோறும் வியாபித்து நின்ற சிவபிரான் சிவலிங்க முதலிய குறிகள் வாயிலாக வெளிப்பட்டு அன்பர்க்கருளுவாராயினர். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் முதலிய நாயன்மாரது சிவபாவனையோடு தோன்றிய தேவாரம் ஏறப்பெற்ற ஸ்தலங்களன்றோ பாடல்பெற்ற ஸ்தலங்கள் என்று என்றும் பாராட்டப்படுகின்றது.

## மகாலிங்கம்

இந்தமாவிலங்கத்தெண்ணான்கிலக்கணவிச்சைமேனி
யந்தமிலழகன்பாகத்துமையொடுமழகுசெய்து
சந்ததம்விளக்கஞ்செய்யுந்தகைமையைநோக்கிச்சோம
சுந்தரனென்னுநாமஞ்சாத்தினார் துறக்கவானர்.

## சிவகாமியம்மையார்

சொற்பொருளு முடலுயிருஞ் சுடரொளியும்
விரைமலருஞ் சுவையும் பாலு
நிற்குநிறை வெனக்கலந்து சிவத்திலந
நியமாகி நிலவு மண்டம்
பற்பலவும் படைத்தளிக்குந் தாயாகி
வினைசமமாம் பருவந் தோன்றுஞ்
சிற்பரையைத் தில்லைநகர்ச் சிவகாம
சுந்தரியைச் சிந்தை செய்வாம்.



# சிவலிங்கமகத்துவம்

## அவையடக்கம்

சைவசித்தாந்த நேயர்களே!

மகாகனம்பொருந்திய அக்கிராசனாதிபதியவர்களும், சிவாசாரியர்களும், சிவனடியார்களும், பண்டிதர்களும், பாவலர்களும், நாவலர்களும், செல்வர்களுமாகிய பெரியோரெல்லாம் ஒருங்கு குழுமிய இந்த மகா சபையிலே உபந்நியாசிக்குமாறு எடுத்துக்கொண்ட விஷயம் எப்பெற்றியதோவெனின், அது மகாவிஷ்ணுவும், பிரமாவும் முறையே வராக வடிவுகொண்டும், அன்னவடிவு கொண்டும், ஆயிரவருஷகாலம் மண்ணுலக நோக்கிக் கீழே இடந்துபோயும், விண்ணுலக நோக்கி மேலே கிளர்ந்து பறந்து போயும் காண்டற்கரிதாய் அடிமுடியிறந்து அமூர்த்தி சாதாக்கிய சோதிஸ்தம்பாகிருதியாய் ஓர் கால் நின்ற சிவலிங்கவிஷயமேயாக, அச்சிவலிங்க சோதியின் அடிமுடி தேடி அலக்கணுற்ற பிரம விஷ்ணுக்களாகிய தேவர்களினும் கடைப்பட்ட மானிடருள்ளும் கடைப்பட்டு அறியாமை எனப்படும் மடைமையையே இயல்பாய் ஆபரணமாகப் பூண்ட பேதையெரெனப்படும் பெண்பாலாருள் ஒருத்தியாகிய அடியாள் அம்மகாசிவலிங்க மகிமையைக் கூறுவான்றுணிதல் யாவர்க்கும் நகைப்பை விளைக்குமென்பதிற் சிறிதும் தடையில்லை யாமாயினும் , பாலோடு சேர்ந்த நீரும், மாலையோடியைந்த நாரும் நற்சார்புபற்றிப் பெரியோரால் இகழப்படாதிருத்தல் போல, அதி திவ்ய சிவலிங்கவிஷயம் எவ்வித குற்றங்களோடியைந்திருப்பினும் அதனைப் பெரியோர் இகழ்ந்து புறக்கணிக்காரென்னும் உறுதிகொண்டு அச்சமின்றி ஒருவாறு பேசத்துணிந்தேன்.

# I. சிவலிங்கத்தின் பொருள்

சிவலிங்கமென்பது சிவமாகிய லிங்கம் எனப் பொருள்படும், இன்றேற் சிவலிங்கம் என்பதிற் சி என்பது சிவமாகிய நாதத்தையும், வ என்பது சத்தியாகிய பீடத்தையும் குறிப்பனவாமெனக் கொண்டு, நாத விந்துக்களோடியைந்த லிங்கமே ஈண்டு உரைக்கப்பட்டாதமெனக் கொள்ளப்படுதலுமாம், இவ்வுண்மை

(1) ஶிவ ஊவ ஷுயம் ஞிஜூ ।
சிவ ஏவ ஸ்வயம் லிங்கம்.

என்னும் ஸ்காந்தபுராண வசனத்தினாலும்

(2) நாஜ ஞிம மஜிதிஜெஞுயம
ஸிநூவீழஜாஹுரதஜ் ॥
நாதம்லிங்க மிதிஞேயம்
பிந்துபீட முதாகிருதம்.

என்னும் ஆகமவசனத்தினாலும் உணரப்படும்.

## II. பல ஆசங்கைகள்

இந்தச் சிவலிங்க விஷயம் வேதத்துப் பிரதி பாதிக்கப்பட்டதா? ஆகமத்தில் விதிக்கப்பட்டதா? புராணத்திற் கூறப்பட்டதா? இதிகாசத்தில் உரைக்கப்பட்டதா? ஸ்மிருதியிற் சொல்லப்பட்டதா? இன்றேல் வேதாகம புராணேதிகாச ஸ்மிருதிகளில் விதிக்கப்படாது இடையிலே எவராலேனும் நூதனமாகக் கற்பித்து விதிக்கப்பட்டு வந்ததா? அது வழிபடப்படும்படி வந்தமைக்குக் காரணம் யாது? எந்தப் பெரியோர் அதனை வழிபட்டார்? அவர் யாண்டு வழிபட்டார்? அவர் வழிபட்டமையால் அடைந்து கொண்ட பெரும் பேறியாது? என்னும் இன்னோரன்னவாய் நிகழும் ஆசங்கைகளை நிராகரிப்பான் முன் வருமாறு ஆராய்வேனாயினேன்.

ஞானகாண்டமாகிய உபநிடதங்களைப் பெரும்பான்மையும் அங்கீகரியாது கரும காண்டத்தையே முழுமையும் அவலம்பிக்கும்

சமாஜத்தினரும், கருமகாண்டமாகிய இருக்காதி வேதங்களை அங்கீகரியாது ஞானகாண்டமாகிய முக்கிய உபநிடதங்களையே அங்கீகரிக்கும் சமாஜத்தினருமாகிய இருதிறத்தாரும் மூர்த்தி உபாசனையானது கர்ம காண்டம் ஞானகாண்டமென இருவகைப்படுகின்ற வேதத்தில் விதிக்கப்படவில்லை என்று சாதிப்பாரேல், முதற்கண்ணே அது வேத விகிதம் என்று உணர்த்துதல் ஆவசியகமாய்ப் போந்தது,

## III. விக்கிரகாராதனை வேதத்தில் விதிக்கப்பட்டமை

(3) ஸம்வத்ஸரஸ்ய ப்ரதிமாம் யாம்த்வா
ராத்ர்யுபாஸதே -
ப்ரஜாம் ஸுவீராம் க்ருத்வா விஶ்வமாயுர் வ்யஶ்நவத்
- ப்ராஜாபத்யாம் ॥

சம்வத்சரஸ்ய பிரதிமாம் யாந்துவா
ராத்திரி யுபாசதே,
பிரஜாம் சுவீராம் கிருத்வா விச்வமாயுர் வ்யச்நவத்,
ப்ராஜாபத்யாம்.

"சம்வற்சர [கால] ரூபியாகிய [உமது] பிரதிமையை [விக்கிரகத்தைச்] செய்து [அஞ்ஞான] இருட்டசையில் உம்மை உபாசிக்கிறான்; [அங்ஙனம் உபாசிப்பவன்] வலிமையுள்ள புத்திரனையும் பூர்ண ஆயுசையும் அடைகின்றான்; பிரஜைகளுக்கு எஜமானனாந் தன்மையையும் [அடைகின்றான்]'' என்று யசுர்வேதத்து 5-ம் கண்டத்து, 7-ம் பிரசினத்து, 2-ம் அநுவாகத்திற் சொல்லப்படுதலானும்,

(4) அஶ்மாநமாகணம் ப்ரபத்யே।
அச்மான மாகணம் பிரபத்யே.

"நன்கு சித்திகரிக்கப்பட்ட சிலையை வணங்குகின்றேன்'' என்று யசுர்வேத ஆரணிய கத்து 4-ம் பிரசினத்திற் காணப்படுகின்றமையானும்,

(5) 𑌯𑌾𑌵𑌨𑍍𑌤𑍋 𑌶𑍍𑌮𑌾𑌨𑍋 𑌸𑍍𑌯𑌾𑌂 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂
𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾 𑌸𑍁 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌃।
𑌯𑌾𑌵𑌨𑍍𑌤𑌃 𑌪𑌾𑌂𑌸𑌵𑍋 𑌭𑍂𑌮𑍇𑌃
𑌸𑌂𑌖𑍍𑌯𑌾𑌤𑌾 𑌦𑍇𑌵 𑌮𑌾𑌯𑌯𑌾 ॥

யாவந்தோச்மாநோஸ்யாம் பிருதிவ்யாம்
பிரதிஷ்டா சுபிரதிஷ்டி தா:,
யாவந்த, பாம்சவோ பூமே:
சங்கியாதா தேவ மாயயா.

"இவ்வுலகத்திலே எத்துணைக் கற்கள் ஸ்தாபித்துச் செவ்விதாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றனவோ, [சோதிரூபராகிய] சிவபிரானது ஞானசத்தியினாற் பூமியிலுள்ள தூளிகள் எவ்வளவென அலகிடப்படுகின்றனவோ, [அவ்வளவும் சிவசொரூபமே]" என்று யசுர்வேதகாடகத்து, 3-ம் பிரசினத்து, 4-ம் அநுவாகத்திற் காணப்படலானும்,

(6) 𑌦𑍈𑌵𑌤𑌾𑌯𑌤𑌨𑌾𑌨𑌿 𑌕𑌮𑍍𑌪𑌨𑍍𑌤𑍇 𑌦𑍈𑌵𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾 𑌹𑌸𑌨𑍍𑌤𑌿
𑌰𑍁𑌦𑌨𑍍𑌤𑌿 𑌗𑌾𑌯𑌨𑍍𑌤𑌿 𑌨𑍃𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑍍𑌫𑍁𑌟𑌨𑍍𑌤𑌿 𑌸𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑍁
𑌨𑍍𑌮𑍀𑌲𑌨𑍍𑌤𑌿 𑌨𑌿𑌮𑍀𑌲𑌨𑍍𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾𑌃 𑌪𑍍𑌰𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 ॥

தேவதாயதநாநிகம்பந்தே தைவதா: பிரதிமாஹசந்தி
ருதந்தி காயந்தி நிருத்யந்தி ஸ்புடந்தி ஸ்வித்யந்த்
யுந்மீலந்தி நிமீலந்தி பிரதிமா: பிரயாந்தி.

"ஈண்டுக் கூறப்படுமாறு விக்கிரகங்களுடைய செய்கையினால் உலகத்துக்குக் கெடுதி உண்டாம் என்பதை உணர்த்துமிடத்து தேவாலயங்கள் நடுங்குகின்றன, தேவதாவடிவமாகிய பிரதிமைகள் சிரிக்கின்றன, அழுகின்றன, பாடுகின்றன, கூத்தாடுகின்றன, வாய்களைத் திறக்கின்றன, வேர்வையை விடுகின்றன, கண்களைத் திறக்கின்றன, மூடுகின்றன, விக்கிரங்கள் நடக்கின்றன," என்று சாமவேதத்து 26-ம் பிராம்மணத்து 5-ம் பிரபாடகத்து 10-ம் கண்டத்திற் கூறபடலானும்,

(7) 𑌏𑌹𑍍𑌯𑌶𑍍𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑌿𑌷𑍍𑌠 ।
𑌅𑌶𑍍𑌮𑌾 𑌭𑌵𑌤𑍁 𑌤𑍇 𑌤𑌨𑍂𑌃 ।

ஏ ஹ்யச்மாநமாதிஷ்ட,
அச்மாபவது தே தநூ:

“[சுவாமி !] வாரும், [இந்தக்] கற்பிரதிமையில் நிற்பீராக; உமது சரீரம் கல்விக்கிரகமாய் இருப்பதாக” என்று அதர்வணவேதத்து 1-ம் கண்டத்து 2-ம் கற்பத்து 3-ம் துவனியிற் காணப்படலானும், யசுர்வேத சாமவேத அதர்வணவேதங்களில் மூர்த்திகள் விதிக்கப் பட்டனவாய்,பிரதிஷ்டை செய்யப்பட்டனவாய், வழிபடப்பட்டனவாய் அறியப்படுகின்றது.

## IV. இதிகாசபுராணங்கள் வேதோபப்பிருங்கணம்

(8) 𑌇𑌤𑌿𑌹𑌾𑌸 𑌪𑍁𑌰𑌾𑌣𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑍇𑌦𑌂
𑌸𑌮𑍁𑌪𑌬𑍃𑌂𑌹𑌯𑍇𑌤𑍍 ।
𑌬𑌿𑌭𑍇𑌤𑍍𑌯𑌲𑍍𑌪𑌶𑍍𑌰𑍁𑌤𑌾𑌦𑍍𑌵𑍇𑌦𑍋 𑌮𑌾𑌮𑌯𑌂
𑌪𑍍𑌰𑌹𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿॥

இதிஹாச புராணாப்யாம் வேதம்
சமுப பிரும்மயேத்,
பிபேத்யல் பசுருதாத் வேதோ மாமயம்
ப்ரஹரிஷ்யதி.

“இதிகாச புரா்ணங்களைக் கொண்டு வேதங்களுக்குப் பொருள் செய்க; [அங்ஙனஞ் செய்யாத] அற்ப கேள்வியினை யுடையான் என்னை [நேர்ந்தவாறு பொருள் செய்து] கொன்றுவிடுவான் என்று வேதம் அஞ்சுகின்றது” என்று பாரதேதிகாசபுராண வாக்கியங்கள் அங்கங்கே கூறப்பட்டிருத்தலை உணரமாட்டாமையால், ராம்மோஹன்றோய் [Ram Mohun Roy], றோவர் [Roer], மோக்ஷமூலர் [Max Muller] முதலிய ஆங்கிலேய உபநிடத மொழிபெயர்ப்புப் பண்டிதர்கள் தலவகாரம் எனப்படும் கேநோபநிடத்து 3-ம் கண்டத்து 12-ம் மந்திரத்திற் காணப்படும்

உமையம்மையாருக்கு ஐமவதி என்னும் திருநாமம் எய்துதற்குக் காரணம் தெளிவாய் அறியமாட்டாது மயக்குற்றுப் போயினார்கள். அமரகோச வியாக்கியானத்தில்,

(9) ஹிஉவத ஃவதஂ ஹீ ஹைஉவதீ ।

ஹிமவத அபத்யம் ஸ்திரீ ஹைமவதீ.

"இமவானுடைய புத்திரியா தலில் ஐமவதி" என்று கூறப்பட்டமையையும், ஸ்காந்தசம்பவ சிவரகசியகண்டத்து 3-ம் அத்தியாயத்தையும், வாயுசங்கிதை உத்ரபாகத்து, 2-ம் அத்தியாயத்து, 46-ம் சுலோகந் தொடுத்து 60-ம் சுலோகம் இறுதியாயுள்ள பதினாறு சுலோகங்களையும், சதருத்திர சங்கிதையின் 16-ம் அத்தியாயத்தையும் பார்த்திருப்பாரேல், உமையம்மையார் இமவானுடைய புத்திரி யாரென்பதையும், இவர்க்கு நாயகர் பரப்பிரம்ம சிவபிரான் என்பதையும் சந்தேகமறத் தெளிவாய் உணர்ந்துகொள்ள வல்லுநராவர்.

இங்ஙனம் யசுர்வேத முதலிய மூன்றினும் மூர்த்திவழிபாடும், சாந்தோக்கியோபநிடதம் மகா நாராயணோபநிடதம் தலவகாரோப நிடதம் என்பவற்றிற் கூறப்பட்டவாறு, சிவபிரான் கிருஷ்ண பிங்களராதலும் உமாபதியாதலும் காணப்பட்டனவேனும், இருக்கு வேதத்தில் இலிங்க வழிபாடு காணப்படவில்லையேயெனிற் கூறுதும்.

(10) தவஸ்ரியெ உரு¬தொ உஜ்ஃயஞ
ரு¬த்யதெ ஜநிஉ சாரு¬சித்ரு ।
தவசிரியே மருதோ மர்ஜயந்த
ருத்ரயத்தே ஜநிம சாருசித்ரம்.

"ஏ உருத்திர! மருத்துக்கள் [பொருளும் அருளுமாம்] உமது செல்வத்தை அடையுமாறு, உமது [சிவபிரானது] விசித்திர ரூபமாகிய மகாலிங்கமூர்த்தியை அபிஷேகாதி பூசை செய்தார்" என்று இருக்குவேதத்து, 5-ம் மண்டலத்து, 3-ம் சூக்கத்து, 3-ம் மந்திரம் காணப்படுகின்றது. இம்மந்திரத்திற் காணப்படும் "ஜநிம"

என்பதற்கு "லிங்கம்" என்று பொருள் கோடற்குப் பிரமாணம் என்னையெனின்,

(11) 𑌰𑍌𑌦𑍍𑌰𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌮𑌹𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾
𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌶𑌿𑌲𑌾𑌮𑌯𑌮𑍍 ।
𑌚𑌾𑌰𑍁 𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 𑌸𑌮𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯
𑌲𑌬𑍍𑌧𑌵𑌾𑌨𑍍 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍍 ।

ரௌத்திரம் லிங்கம் மஹாவிஷ்ணுர் பக்த்யா
சுத்தம் சிலாமயம்
சாரு சித்ரம் சமர்ப்யர்ச்ய
லப்தவாந் பரமம் பதம்.

"மஹாவிஷ்ணுவானவர் தூயதும், சிலாமயமும், மநோஞ்ஞ விசித்திரமுமாகிய சிவலிங்கத்தை அன்பினோடு அர்ச்சித்துப் பரமபதத்தை [வைகுண்ட பதத்தை] அடைந்தார்" என்று பராசரோபப் பிருங்கணம் கூறுமாற்றால் துணியப்படும். ஈண்டு

(12) 𑌚𑌾𑌰𑍁 𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 𑌤𑍇 𑌜𑌨𑌿𑌮 ।

சாரு சித்ரம் தே ஜநிம.

என்று இருக்குவேதம் கூற அதற்கு

(13) 𑌚𑌾𑌰𑍁 𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 𑌰𑍌𑌦𑍍𑌰𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑍍 ।

சாரு சித்ரம் ரௌத்ரம் லிங்கம்.

என்று பராசரபுராணம் பொருள் கூறினமையின், ரௌத்திரம் ஜநிம என்பது சிவலிங்கத்தை உணர்த்தியவாறாயிற்று. இவ்விஷயத்தில் உபப்பிருங்கணம் அறியாத பாஷ்யகாரர் மற்றொன்றெழுதி வழூஉப்பட்டார்.

(14) 𑌰𑍌𑌦𑍍𑌰𑌂 𑌸𑌮𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯 𑌹𑌿 𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑍈𑌶𑌂
𑌶𑌿𑌲𑌾𑌮𑌯𑌂 𑌚𑌾𑌰𑍁 𑌹𑌰𑌿𑌰𑍍𑌬𑌦𑍍𑌧𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 ।
𑌸𑌾𑌰𑍂𑌪𑍍𑌯𑌮𑍍 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵 𑌮𑌾𑌤𑍍𑌮𑌤𑍁𑌲𑍍𑌯𑌂
𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌪𑌦𑌂 𑌪𑌰𑌂 𑌯𑌃 ।

ரௌத்ரம் சமப்யர்ச்சிய ஹரி லிங்கமாதௌ
சிலாமயம் சாரு ஹரிஸ்து பக்தியா |
சுதுர்லபம் வைஷ்ணவ மாத்ய மக்ரம்
பிராப்தவாந் சிரேஷ்ட பதம் பரம் யத் ||

"விஷ்ணுவானவர் அன்பினோடு ஆதியில் மநோஞ்ஞமாய், சிலாமயமாயுள்ள சிவலிங்கத்தை யென்றோ வழிபட்டு, மிகுதியும் கிடைத்தற்கரிதாய், ஆதியாய், தலைமையாய், சிரேஷ்டமாயுள்ள தமக்குரிய [விஷ்ணுவுக்குரிய] பரமபதத்தை அடைந்தார்'' என்று விருத்தகிரி மான்மியமும் அப்பொருளைத் தந்து நின்றது.

(15) 𑌅𑌹𑌂 𑌯𑌥𑌾𑌵𑌦𑌾𑌰𑌾𑌧𑍍𑌯𑌃
𑌕𑍃𑌷𑍍𑌣𑍇𑌨𑌾𑌕𑍍𑌲𑌿𑌷𑍍𑌟𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌿𑌷𑍍𑌟𑌤𑌮𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌤𑍍
𑌤𑌨𑍍𑌯𑍋 𑌮𑌮 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

அஹம் யதாவதாராத்ய:
கிருஷ்ணே நாக்கிலிஷ்ட கர்மணா |
தஸ்மா திஷ்டதம: கிருஷ்ணா
தந்யோ மமநவித்யதே ||

"யான் [சிவன்] இளைப்புறாத் தொழில்பூண்ட கிருஷ்ணரால் விதிப்படி ஆராதனை செய்யப்படுகின்றேன்; ஆகலின், கிருஷ்ணரினும் எனக்கு அதிப் பிரீதியுடையர் பிறரிலர்'' என மகாபாரத சவுத்திக பருவத்து, 7-ம் அத்தியாயமும் சிவலிங்கப்பெருமானை விஷ்ணு பூசித்துவந்தார் என்றமைக்குச் சான்றாம் என்க.

(16) 𑌶𑌿𑌵𑌲𑌿𑌂𑌗𑌾𑌯 𑌨𑌮𑌃 ।

சிவலிங்காய நம |

"சிவலிங்கத்துக்கு நமஸ்காரம்'' என்று யசுர்வேத தைத்திரீய ஆரணியகத்து 10-ம் பிரசினத்து 16-ம் அநுவாகத்திற் கூறப்படுகின்றது.

# V. சிவலிங்க வழிபாட்டின் காலம்

இருக்குவேத முதலியவற்றின் மந்திரங்கள் கிறிஸ்துவுக்கு எண்ணூறு வருஷங்களுக்கு முன்னரே உளவாயிருக்க வேண்டுமென்று வில்சன் [Wilson], மோக்ஷமூலர் [Max Muller] முதலிய பண்டிதர்கள் கூறுகின்றமையின், வேதோற்பத்தி இற்றைக்கு இரண்டாயிரத்து எழுநூறு வருஷத்தனவே என்று பெறப்பட்டு, அதனால் வேதோக்தமாகிய சிவலிங்கவழிபாடும் இடைப்பட்டதே எனக் கூற நேர்ந்துவிடுமே எனின், அன்று; அந்தணர் முதலாயினோர் தினந்தோறும் பஞ்சாங்க வாயிலாக உணர்ந்து அநுஷ்டிக்கும் சந்தியாவந்தனத்துக்குரிய காலங்களிலே வழக்கமாகச் செய்யப்படும் சங்கற்பத்தில், "வைவசுவத மனுவந்தரத்துக் கலியுகம்'' என்றற்றொடக்கத்தனவாகக் காணப்படுகின்றதென்றும், இராப்பகல்களும், வாரங்களும், மாசங்களும், வருஷங்களும் மாறி மாறி வருதல்போல, கிருதயுக முதலிய நான்கு யுகங்களும் மாறிமாறி வருகின்றன என்றும், இந்த நான்கு யுகங்கட்குமுள்ள வருஷம் நாற்பத்து மூன்று லக்ஷத்து இருபதினாயிரம் வருஷமாம் என்றும், இந்தச் சதுர்யுகம் எனப்படும் மகாயுகம் ஆயிரத்தெட்டுக் கொண்டது பிரமாவுக்கு ஓர் பகலாய், இந்தப் பகலிலே பதினான்கு மனுக்கள் அதிகாரஞ் செய்வார்களென்றும்,ஓர் மனு அரசு புரியுங்காலம் எழுபத்தொரு மகாயுகமாம் என்றும், அப்பதிநான்கு மனுக்களுள்ளே அரசு புரிந்தொடுங்கினோர் சுவாயம்புவர், சுவரோசிஷர், அவுத்தமி, தமசர், இரைவதர், சாட்சுஷர் என்னும் ஆறு மனுக்களாம் என்றும், இப்போது ஏழாவது வைவசுவத மனுவின் காலம் ஆரம்பித்து இருபத்தேழு மகாயுகம் கழிந்து போக, இருபத்தெட்டாவது யுகத்தினும் கிருத, திரேத, துவாபரம் என்னும் மூன்றுஞ் சென்றுவிட, கலியுகத்தில் ஐயாயிரத்துப் பதின்மூன்றாம் வருஷமாகிய விரோதிகிருது வருஷம் நடைபெறுகின்றதென்றும் பெறப்படுவதேயாக, இந்த நான்கு வேதங்களும் ஏனைய சாஸ்திரங்களும் தோன்றிய காலம் எத்துணைத்தென்று

கணித்தறிதல் கூடாமையின் என்க. ஆகலின், வேதம் எப்பொழுதுண்டோ, அப்பொழுதே சிவலிங்க வழிபாடும் உளாதமென உறுதியாக நிச்சயிக்கப்படும்.

## VI. லிங்கத்தின் தாது அர்த்தம்

(17) ஞயம் மசுஷி ஹூதாநி
ஸம்ஹாரௌநிவிஞாநி ஊ ।
ஸரஷிகாளெ யயாஸரஷி
ஷஸாஜ்ஞிம் மஉஷாஹரதழ ॥

லயம் கச்சந்தி பூதாநி
சம்ஹாரே நிகிலாநி ச ।
சிருஷ்டிகாலே யதா சிருஷ்டிஸ்
தஸ்மால்லிங்கமுதா கிருதம் ॥

“சங்காரகாலத்திலே சமஸ்த சேதனாசேதனப் பிரபஞ்சங்களும் லயத்தை அடைந்து, பின் சிருஷ்டிகாலத்திலே அங்ஙனம் உற்பத்தியாகின்றமையால் லிங்கம் எனப்படும்” என்று சுப்பிரபேதாகமங் கூறுகின்றது. இப்பொருளை உலகத்திலுள்ள ஒவ்வோர் அசேதன சேதனப் பொருள்களினும் நிகழக் காண்கின்றேம். வித்துக்களினின்று மரங்கள் உண்டாகின்றன; அம்மரங்கள் வளர்ந்து உயர்ந்து பருத்து அரும்பிப் பூத்துக் காய்த்துப் பின் வாடி உலர்ந்து அழியுங்காலத்து, அம்மரத்து விதைகள் மண்ணுள்ளே சிலகாலம் சத்தாரூபமாய் அமர்ந்திருந்து, பின் அங்குரித்துச் செடிகளாகி மரமாகின்றன. சமுத்திரத்துள்ள நீர் அணு அணுவாகச் சூரியவெப்பத்தினால் மேலே கிளர்ந்து ஆகாய மண்டலத்திற்போய் முகில்களாகி, பின் மலைச்சார்பை அடைந்து மழையாய் வருஷித்துவிட, அவை சிறு ஊற்றுக்களாகி, அருவிகளாகி, நதியாகி, சமுத்திரத்திற்போய் லயமடைகின்றன. மலைகளிலே மழை பெய்யுங்கால் அம்மலையருவிகள் மலைகளைச் சிறுகச் சிறுகத் தேய்த்து அரித்து நுண்மணல்களாகக் கொண்டுபோய் ஓரிடத்திற் சேர்ப்ப, அவை பின்னர் ஒன்று சேர்ந்து

கற்களாகி, படிமுறையானே மலைகளாக ஓங்கி நிற்கின்றன. பறவைகள் முட்டைகளையிட்டு இறந்துபோய்விட, பின் அம்முட்டைகளினின்று குஞ்சுகள் தோற்றிப் பெரியவாகின்றன. மிருகங்கள் அங்ஙனம் கன்று, குட்டி, பறழ், பிள்ளை, குழவி, பார்ப்பு, குருளை, மறி, போதகம் என்பவற்றைப் பெற்று இறந்துவிட, பின்னர் அக்குழந்தைகள் பெரியனவாய் வளர்வனாயின. காரியமெல்லாம் ஸ்தூல வடிவினதாயும், காரணமெல்லாம் சூக்கும வடிவாயும், அமையக் காண்கிறோம். இங்ஙனம் லிங்கப்பிரபாவம் தினந்தோறும் நாம் நோக்கும் சராசரப்பொருள்களிலே தோற்றி ஒடுங்கி நிற்கக் காணுமாறுபோல, இப்பூமியும், நக்ஷத்திரங்களும், சூரிய சந்திரர்களும், பிறவும் ஓர் காலத்திலே ஒடுங்கித் தோற்றுமாம் என்பது நிச்யிக்கப்படும்.

## VII. லிங்கம் பஞ்சகிருத்தியத்தை விளக்குகின்றமை

தோன்றிய பொருள் உடனே அழிந்து போகாமற் சிலகாலம் நிலைத்து நின்று அழிகின்றமையான், ஒவ்வொன்றினும் தோற்றம், திதி, சங்காரம் என்னும் மூன்று கிருத்தியமும் நிகழ்கின்றன. மகா சிருட்டிகாலத்தில் எய்தும் படைத்தல் முதலிய மூன்று கிருத்தியங்களுள் திதிகிருத்தியத்தில் திரோபவ கிருத்தியமும், சங்காரகிருத்தியத்தில் அநுக்கிரக கிருத்தியமும் அடங்குவன என்று பெரியோர் கூறுகின்றார். ஆன்ம தத்துவப்பாற்பட்ட அசுத்தப் பிரபஞ்சமும், வித்யா தத்துவப் பாற்பட்ட சுத்தாசுத்தப் பிரபஞ்சமும், சிவதத்துவத்தின் பாற்பட்ட சுத்தப்பிரபஞ்சமுமாகிய முத்திறப் பிரபஞ்சத்தினும் சிருஷ்டி, ஸ்திதி, சங்கார, திரோபவ, அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியமும் சித்திகரிக்கப்பட்டிருத்தலாக விளங்குதலின் வருண பத்ததியுடையார்.

(18) [illegible]

லிங்கசப்தேநாத்ர லிங்க சித்ரீகரண தாத்வர்த்த
கத்யா லிங்க இதி சிருஷ்டி ஸ்தித்யாதிபி :
கிருத்யைர் ஜகச்சித்ரீகரணம் கரோதீதி பரமேச்வர:

"லிங்கம் என்னும் சப்தமானது சித்திரித்தல் எனப் பொருள்படுகின்ற லிகி என்னும் தாதுவினின்றும் பிறந்தமையாற் சிவபிரான் சிருஷ்டி முதலிய பஞ்சகிருத்தியங்களாற் பிரபஞ்சத்தைச் சித்தரிக்கின்றார்'' என்று பொருள் கொள்ளுகின்றார். இங்ஙனம் பஞ்சகிருத்தியப் பிரபாவத்தை விளக்கும் லிங்க சப்தமானது சிலை முதலியவற்ருக்கும் உபசாரமாத்திரத்தினால் வழங்கப்படுகின்றது.

(19) 𑌨𑌾𑌦𑌂 𑌲𑌿𑌂𑌗𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂
𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌃 𑌪𑍀𑌠𑌮𑌿𑌤𑌿 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ।

நாதம் லிங்கமிதி ப்ரோக்தம்
பிந்து: பீட மிதி ஸ்மிருதம்.

"[சிவலிங்கத்தின் மேற்புறமாகிய] நாதம் லிங்கம் எனவும், [கீழ்ப்புறமாகிய விந்து பீடமெனவும்படும்; என்று சிவாகமங் கூறுகின்றது.

## VIII. பிரபஞ்ச முழுமையும் சிவமும் சக்தியுமாம்

(20) 𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌲𑌿𑌂𑌗𑌮𑍁𑌮𑌾𑌪𑍀𑌠𑌂 𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।
𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌨𑌰 𑌉𑌮𑌾𑌨𑌾𑌰𑍀 𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।
𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌉𑌮𑌾𑌵𑌾𑌣𑍀 𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।
𑌰𑍁𑌦𑍍𑌰𑍋𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍁𑌮𑌾𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀 𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।
𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 𑌸𑍂𑌰𑍍𑌯 𑌉𑌮𑌾 𑌛𑌾𑌯𑌾 𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।

𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 𑌸𑍋𑌮 𑌉𑌮𑌾 𑌤𑌾𑌰𑌾 𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।
𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌦𑌿𑌵𑌾 𑌉𑌮𑌾 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।
𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌯𑌜𑍍𑌞 𑌉𑌮𑌾𑌵𑍇𑌦𑍀 𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।
𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌵𑌹𑍍𑌨𑌿𑌰𑍁𑌮𑌾 𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।
𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌵𑍇𑌦 𑌉𑌮𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌨𑍍𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।
𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌵𑍃𑌕𑍍𑌷 𑌉𑌮𑌾𑌵𑌲𑍍𑌲𑍀 𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।
𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌗𑌨𑍍𑌧 𑌉𑌮𑌾𑌪𑍁𑌷𑍍𑌪𑌨𑍍𑌤𑌸𑍍𑌮𑍈
𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।

ருத்ரோ லிங்க முமாபீடம் தஸ்மைதஸ்யை நமோ நம;
ருத்ரோ நர உமா நாரீ தஸ்மை தஸ்யை நமோ நம;
ருத்ரோ பிரம்மா உமா வாணீ தஸ்மை தஸ்யை நமோ நம;
ருத்ரோ விஷ்ணுருமாலக்ஷ்மீ தஸ்மை தஸ்யை நமோ நம;
ருத்ர: சூர்ய உமா சாயா தஸ்மை தஸ்யை நமோ நம;,
ருத்ர: சோம உமா தாரா தஸ்மை தஸ்யை நமோ நம;
ருத்ரோ திவா உமா ராத்ரிஸ் தஸ்மை தஸ்யை நமோ நம;
ருத்ரோ யஞ்ஞ உமாவேதீ தஸ்மை தஸ்யை நமோ நம;
ருத்ரோ வஹ்நி ருமா ஸ்வாஹா தஸ்மை தஸ்யை நமோ நம;
ருத்ரோ வேத உமா சாஸ்திரம் தஸ்மை தஸ்யை நமோ நம;
ருத்ரோ விருக்ஷ உமா வல்லீ தஸ்மை தஸ்யை நமோ நம;
ருத்ரோ கந்த உமா புஷ்பம் தஸ்மை தஸ்யை நமோ நம:.

“லிங்கம் உருத்திரராகவும், பீடம் உமையாகவும் இருக்கும் அவ்விருவர்க்கும் நமஸ்காரம்; நரராயும், நாரியாயும், பிரமாவாயும், சரசுவதியாயும், விஷ்ணுவாயும், இலட்சுமியாயும், சூரியனாயும் சாயையாயும், சந்திரனாயும், தாரையாயும், பகலாயும், இரவாயும்,

யாகமாயும், வேதியாயும், அக்னியாயும், சுவாகாவாயும், வேதமாயும், சாஸ்திரமாயும், விருக்ஷமாயும், கொடியாயும், மணமாயும் மலராயும் முறையே இருக்கும் சிவபிரானுக்கும் உமையம்மையார்க்கும் நமஸ்காரம் நமஸ்காரம்'' என்று உருத்திரகிருதயோபநிடதம் கூறுகின்றது. இங்ஙனம் உபநிடதத்திற் கூறப்பட்டாற்போல, சிவபுராணமும் கூறுகின்றது.

தாய் தந்தையரிலரேற் குழந்தையிலதாமாறுபோல, சிவனும் சத்தியுமில்லையேற் பிரபஞ்சம் இல்லையாய்விடும். சிவனே தந்தை, சக்தி தாய்; சிவனே பரமான்மா, சக்தி மனோன்மணி ; சிவன் மகேசுவரன், சத்தி மாயை; சிவன் புருஷன், சத்தி பிரகிருதி ; சிவன் உருத்திரன், சத்தி உருத்திராணி ; தேவி ; சிவன் திருமால், உமை லட்சுமி ; சிவன் பிரமா, சத்தி சரசுவதி ; சிவன் சூரியன், சத்தி பிரபை ; சிவன் இந்திரன், சத்தி இந்திராணி ;சிவன் அக்னி,; சத்தி சுவாகா சிவன் யமன், சத்தி யாமி ; சிவன் நிருதி, சத்தி நைருதி ; சிவன் வருணன், சத்தி கவுரி ; சிவன் வாயு, சத்தி சிவை ; சிவன் குபேரன், சத்தி இருத்தி ; சிவன் சந்திரன், சத்தி உரோகிணி ; சிவன் ஈசனார், சத்தி ஈசானி ; சிவன் அனந்தன், சத்தி அனந்தை ; சிவன் காலாக்கிநிருத்திரர், சத்தி காளி ; சிவன் சுவாயம்புமனு, சத்தி சத்ரூபை ; சிவன் தக்கன், சத்தி பிரசூதி ; சிவன் ருசி, சத்தி ஆகூதி ; சிவன் பிருகு, சத்தி கியாதி ; சிவன் மரீசி, சத்தி சம்பூதி ; சிவன் அங்கிரா, சத்தி ஸ்மிருதி ; சிவன் புலஸ்தியன், சத்தி பிரீதி ; சிவன் புலகர், சத்தி க்ஷமை ; சிவன் கிருது, சத்தி சன்னிதி ; சிவன் அத்திரி, சத்தி அநுசூயை ; சிவன் காசிபர், சத்தி அதிதி ; சிவன் வசிஷ்டர், சத்தி அருந்ததி ; இங்ஙனம் ஆணுருவமெல்லாம் சிவன், பெண்ரூபமெல்லாம் சத்தி ; விஷயங்களெல்லாம் சத்தி, அவைகளை நுகர்வோர் சிவன் ; கேட்பவன், தொடுவோன், காண்போன் என்போர் சிவன் ; கேட்கப்படுவதும், தொடப்படுவதும், காணப்படுவதும் சக்தி ; சுவைகள் சத்தி சுவைப்போன் சிவன் ; மணம் சக்தி, அவற்றை நுகர்பவர் சிவன் ; உயிர் சிவன், உடல்

சத்தி ; பகல் சிவன், இரவு சத்தி, ஆகாயம் சிவன், பூமி சத்தி ; சமுத்திரம் சிவன், அதன் கரை சத்தி, மரங்கள் சிவன், அவற்றிற் படரும் கொடி சத்தி ; சொற்களெல்லாம் சத்தி, அவற்றின் பொருளெல்லாம் சிவன்'' என்று வாயுசங்கிதை உத்ரபாகத்து ஐந்தாம் அத்தியாயங் கூறுகின்றது. இங்ஙனம் சிவபிரானும் சத்தியாரும் பிரியாது உளராய்ச் சிவலிங்கப் பிரபாவத்தை உணர்த்துவாராயினர்.

(21) 𑌨𑌵𑌜𑍍𑌰𑌾𑌙𑍍𑌕𑌂 𑌨𑌪𑌦𑍍𑌮𑌾𑌙𑍍𑌕𑌂 𑌨𑌚
𑌚𑌕𑍍𑌰𑌾𑌙𑍍𑌕𑌞𑍍𑌚 𑌕𑍁𑌤𑍍𑌰𑌚𑌿𑌤𑍍 ।
𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌙𑍍𑌕𑌞𑍍𑌚 𑌭𑌗𑌾𑌙𑍍𑌕𑌞𑍍𑌚
𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌮𑌾𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌜𑌗𑌤𑍍 ।

ந வஜ்ராங்கம் ந பத்மாங்கம் நச
சக்ராங்கஞ்ச குத்ரசித் |
லிங்காங்கஞ்ச பகாங்கஞ்ச
தஸ்மாந் மாஹேச்வரம் ஜகத் ||

"[இப்பிரபஞ்சத்தில்] யாண்டாயினும் [இந்திரனுடைய] குலிசாயுதக் குறியேனும், [பிரமாவுடைய] கமலக்குறியேனும், [விஷ்ணுவுடைய] சக்கரக்குறியேனும், காணப்படவில்லை; [பின்] சிவன் சத்தி என்னும் இருவருடைய லிங்காங்க பகாங்காங்களே யாண்டும் உண்மையின், பிரபஞ்சமனைத்தும் சிவவடிவமேயாம்'' என்றது ஞானசித்தியாகமம். இவ்வுண்மை நோக்கி,

மச்சரங்கமும்மலரவனங்கமும்
வச்சிராங்கமுமில்லைமண்மீதிலே
யச்செலாம்லிங்காங்கபகாங்கமே
பிச்சர்காளெம்பிரானல்லதில்லையே

என்று ஞானாவரணவிளக்கமும் கூறுகின்றது.

# IX. சிவபெருமானை லிங்க முதலிய குறியில் நிறுத்தி வழிபடல் ஆவசியகம்

வாக்கொடு மனமி றந்த மன்னவ னெங்கு மாகி
நீக்கற நிறைந்தா னேனு நிகழ்தரா ததனான்
முத்தி போக்கெளி தல்ல வென்றப் புனிதனே,
புந்தி செய்தேம் பாக்கிய வகையா வெண்ணில்
பதிமிகுபாரில் வைத்தான்

என்று கோயிற்புராணம், கூறுமாறு, வாக்கும் மனமுமிறந்து நின்ற சிவபெருமான் [விறகில் அக்கினியும், எள்ளில் எண்ணெயும், பசுவிற்பாலும் போல] எங்கும் வியாபித்து நின்றாரேனும், அவ்வுண்மை எவர்க்கும் புலப்படாமையினால் முத்தியடைதல் எளிதன்றென்று சிவபெருமான் தாமே திருவுளங்கொண்டு, எம்புண்ணிய வசத்தினால் எண்ணில்லாத ஸ்தலங்களைப் பூமியிலே வைத்தருளினார்.

சர்வவியாபகராகிய சுவாமி என்று ஒருவர் கண்களை மூடிக்கொண்டு சிவபெருமானை நோக்கி விளிப்பாரேல், அவர் சமுத்திரத்தைப் பார்த்திருந்தாற் சமுத்திரமாயோ, வனாந்தரத்தைப் பார்த்திருந்தால் வனாந்தரமாயோ, இன்றேற் பசும்புற்றரையாயோ, இன்றேல் ஆகாயமாயோ அவர் மனசுக்குத் தோன்றுமன்றி, மற்றோர் வியாபகம் அவர்க்கு எய்தாது. மனசோ சூனியத்தில் நிலைக்காது; சைவ சித்தாந்த உண்மை நிலையை உள்ளவாறு ஞானாசாரியார் வாயிலாக அறிந்தவர்க்கே அருளே தாரகமாய் நின்று வியாபகமுற்றுச் சிவத்தை அறியும் சக்தி உண்டாகும். மனசானது இயல்பாகவே புற விஷயங்களிற் செல்ல அவாவும் இயற்கையுடையது. ஆகலின் அப்புறவிஷயங்களினின்று மனசைத் திருப்புதற்கு ஓர் மூர்த்தி ஆவசியகம் வேண்டற்பாலதாகும். இந்த மூர்த்தி வழிபாடும் அகமும் புறமுமென இருதிறப்பட்டு நிற்கும். ஒன்று சிலைமுதலியவாக ஆராதிப்பது. மற்றது மனசினால் ஆராதிப்பது. கிறிஸ்தவர் தமது ஆண்டவரையுற்றுப் பிதாவே !

நீதி அதிபரே ! இராசாவே ! என்று பிரார்த்திக்குந்தோறும், அவர் மனசுக்கு அக்கிறிஸ்துவின் வடிவம் புலப்படுகின்றது. சிலை முதலியவற்றில் செய்யப்படும் உபாசனை ஸ்தூலோபாசனையாம்; மனசினால் வழிபடப்படும் ஆராதனை சூக்கு மோபாசனை எனப்படும். சூக்குமோபாசனை செய்கின்றவர்கள் சத்திய சூக்குமோபாசனையோடு ஸ்தூலோபாசனை செய்கின்றவர்களை விக்கிரகாராதனை செய்பவர்களென்று நிந்திக்கின்றார்கள். அங்ஙனம் நிந்திப்பவர்கள் தமது விவிலிய நூலின் யாத்திராகமத்து 25-ம் அதிகாரத்தில் "யேகோவா மோசேயை நோக்கி, சீத்தீம் மரத்தினால் ஓர் பெட்டி செய்து, அதனைச் செம்பொற்றகட்டினால் மூடி, அதன் மேற் செம்பொன்னால் ஓர் கிருபாசயம் செய்து, அந்தக் கிருபாசயத்தில் இரண்டோரத்திற்கும் பொன்னால் இரண்டு செருபிகள் என்னும் விக்கிரகங்களை உண்டாக்கி, அப்பெட்டிக்குள்ளே தாம் எழுதிக்கொடுத்த சாக்ஷிப்பத்திரத்தை வைத்துச் சதாகாலமும் ஆராதனை செய்" என்று விதித்தார் என்று கூறப்படுகிறது. இங்ஙனம் விக்கிரகாராதனை விவிலிய நூலில் யாத்திராகமம் எண்ணாகமமுதலிய புஸ்தகங்களிற் காணப்படுகின்றது. இற்றைக்கு இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னே இங்கிலாந்தில் ஆதியிலிருந்த குருமார்கள் விக்கிரகங்களையே வழிபட்டாரென்பது இங்கிலாந்து சரித்திரத்தினால் அறியப்படுகின்றது. இங்கிலாந்து தேச முதலிய இடங்களில் எங்கெங்கே கிறிஸ்துமதம் வியாபித்திருந்ததோ, அங்கங்கேயுள்ள ஆலயங்களினும், பிரபுக்கள் மாளிகைகளினும், வீதிகளினும், கடைகளினும் விக்கிரகங்கள் நிருமிக்கப்பட்டிருந்த சுவடுகள் இப்போதும் புலப்படுகின்றன. இற்றைக்கு முன்னூறு வருஷங்களுக்கு முன்னே சீர்திருத்தக்காரரால் இங்கிலாந்தில் விக்கிரகங்கள் தகர்க்கப்பட்டு ஒழிந்தனவாமாயினும், அவை சாளரக்கண்ணாடிகளினும், ஆலயங்களினும் பின்னரும் நிருமிக்கப்பட்டு விளங்குகின்றன. விக்கிரகாராதனை கூடாதென்று சாதிக்கின்ற மகமதியரும் தாம் செபம் செய்யும்போதெல்லாம் கபா [Kaba] என்னும் ஆலயமத்தியில் இருப்பதாகச்

சிந்திக்கின்றாரன்றோ. அராபியாவிலுள்ள மெக்காவுக்கு அவர்கள் யாத்திரை செய்யுங்கால், ஆங்கு சுவர் ஒன்றிலுள்ள கருங்கல்லொன்றை முத்தமிடுகின்றார்களாம். இலட்சக்கணக்காகிய மகமதியரால் அக்கல்லின்மீது பதிக்கப்பட்ட முத்தங்கள் நியாய தீர்ப்பு நாளில் மகமதிய பக்தர்களுக்காகச் சான் கூறுமாறு எழுந்து நிற்கும் என்கின்றார்கள். இங்ஙனம் மெய்ப்பொருளை உணர்த்தற்குப் படம், மணி, புஸ்தகம், ஆலய முதலியவைகள் உபயோகிக்கப்பட்டு வருகின்றன.

## X. விக்கிரகத்தில் வழிபாடு செய்தலினும் லிங்கத்தில் வழிபாடு செய்தலே சிரேஷ்டம்

அசுவத்தாமர் ஆக்கிநேயாஸ்திரத்தை நரநாராயணர்கள் எனப்படும் அருச்சுனர் கிருஷ்ணர் என்னும் இருவர்மீதும் பிரயோகித்தார். அவ்வாக்கிநேயாஸ்திரம் பாண்டவர் சைனியங்களையெல்லாம் தகித்துவிட்டது. அதனால் அர்ச்சுனரும் கிருஷ்ணரும் எரிந்து போயினார்களோ என்று சந்தேகிக்கத்தக்கதாக நேர்ந்துவிட்டது. உடனே, அர்ச்சுனர் பாசுபதாஸ்திரத்தைக் தொடுத்தனர் ; தொடுத்தமாத்திரத்திலே அக்கினியஸ்திரம் தன்வலிகுன்றி ஒடுங்கிப் போயிற்று. அதனால் அவ்விருவரும் அக்கினியஸ்திரத்தினால் ஊறுபாடடைந்தா ரல்லரென்பது யாவர்க்கும் புலப்பட்டது. தமது பாணம் வலிகுன்றினமையைக் கண்ட அசுவத்தாமர் மனம் வருந்தித் தமது வில்லை எறிந்துவிட்டுத் தேரை விட்டிறங்கி யுத்தஞ் செய்யாது ஓடினார். வியாசமுனிவர் அவர்க்கு எதிர்ப்பட்டு வந்து, அசுவத் தாமரை நோக்கி, "நீ யாதுக்காக ஓடுகின்றனை" என்று வினாவ, அதற்கு அவர், "நான் பிரயோகித்த அக்கினி பாணத்தை அசுரரேனும், கந்தருவரேனும், பிசாசரேனும், இராக்ஷசரேனும், உரகரேனும், பக்ஷரேனும், பக்ஷிகளேனும், மனிதரேனும் எதிர்க்கலாற்றார். அவ்வக்கினி பாணம் பாண்டவர் சைனியங்களை மாத்திரம் செயித்ததேயன்றிக் கேசவார்ச்சுனர் என்னும்

இருவரையும் செயிக்க வன்மையிலாது போனமை யாது காரணம்பற்றியோ? என்பதை அறிய அவாவுகின்றேன்'' என்று கூற, வியாசமுனிவர் அசுவத் தாமரை நோக்கிக் கூறுகின்றார் ; சிவபெருமானை யுற்று நாராயணர் அறுபத்தாறாயிரம் வருஷம் இமாசலத்திலிருந்து தவஞ் செய்து அச்சிவபெருமான் திருவருளினாற் பெரு வரங்களைப் பெற்றார்; இந்நாராயணருடைய தபசிலிருந்தே நரராகிய அர்ச்சுனரும் தோற்றினார். அ தன்றிக் கேசவார்ச்சுனரைப் போல நீ சென்மத்தினாலும், கர்மத்தினாலும், தவத்தினாலும் சிறந்தனையே யாயினும்.

(22) தாஹ்ாஂ ஞிஂமொzஞிபுதொ
ஜெவஷ்யாzஞுபுாயாஂ ய¬ெம ய¬ைம ।
ஸஊஷுா¬ஜ ஹக்ஷு கெஶவொ
ா¬ஜ ஸஂ ஹவஃ ।
ஸவபுா¬வஂ ஹவஂஜ்ஞாகா
ஞிஂமஜ்ஞுபுயதி வ்ஹ¬ஃ ।
தஹ்மிஊவப்யிகொ வ்ரீதிஂ கரொதி
வரஷஹஜ்வஜஃ ।

தாப்யாம் லிங்கோர்ச்சிதோ
தேவஸ்த்வ்யார்ச்சாயாம் யுகே யுகே,
ச ஏஷ ருத்ரபக்தச்ச கேசவோ ருத்ர சம்பவ :,
சர்வரூபம் பவம் ஞாத்வா லிங்கமர்ச்சயதி பிரபும்,
தஸ்மிந்நப்யதிகோ ப்ரீதிம் கரோதி விருஷபத்வஜ:

"யுகந்தோறும் அவ்விருவரும் சிவபிரானை லிங்கத்திலே அர்ச்சிக்கின்றார்; நீ அச்சிவபிரானை விக்கிரகத்தில் வழிபடுகின்றாய்; உருத்திரரினின்றும் தோற்றிய அந்தக் கேசவரே சிவபக்தர்; சிவபெருமான் விசுவரூபராயிருக்கின்றமையை அறிந்து பிரபுவாகிய சிவலிங்கப் பெருமானை அவர் அர்ச்சிக்கின்றார். ஆகலின், இஷபக்கொடியினராகிய சிவபெருமான் இந்தக் கிருஷ்ணரில் மிகுந்த பிரீதி செய்கின்றார்'' என்று கூறியதாகத்

துரோணபருவத்திற் கூறப்பட்டிருக்கின்றது. மாகேசுவர வடிவங்களுக்கும் மேலாயது சிவலிங்கம் என்பது சிவாகம நூற்றுணிபா மாதலினாலும் விக்கிரகங்களிற் பூஜை செய்வதினும் சிவலிங்கத்தில் வழிபடுதலே மகாவிசேஷம் என்றோர்க.

சிவபெருமான் அநாதிகேவலத்துள்ள ஆன்மாவுக்கு அநாதி ஜகத் சிருட்டி செய்யும் போது தாமே தலமும், தீர்த்தமும், மூர்த்தியுமாம் திருமேனி கொண்டு எழுந்தருளியிருத்தலினால், தலவாசத்தினாலும் தீர்த்த ஸ்பரிச முதலியவற்றினாலும், சிவலிங்கமூர்த்தி வழிபாட்டினாலும் ஒருவர்க்கு அநேகபிரகாரமாக அச்சிவபிரான் உபகரித்துச் சிவபுண்ணியங்களைக் கொடுக்கின்றார். இதுபற்றியே "மூர்த்திதலந்தீர்த்தம் முறையாற்றொடங்கினர்க் கோர்வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்றார் தாயுமானவசுவாமிகளும்.

## XI. மணிமந்திர ஔஷதங்களுள்ளே சிவலிங்கம் மணியாகும்

(23) ஶிவலிங்கம் மணி ஸாக்ஷாந்மந்த்ர:
பஞ்சாக்ஷரஸ்ததா ।
பூதிரேவௌஷதம் பும்ஸாம்.....।

சிவலிங்கம் மணி : சாக்ஷாம் மந்திர :
பஞ்சாக்ஷரஸ்ததா |
பூதிரே வௌஷதம் பும்சாம் ||

"[மணி மந்திர ஔஷதம் என்னும் மூன்றனுள்ளே] மனிதர்க்கு மணி சிவலிங்கமே : மந்திரமே பஞ்சாக்ஷரம் : விபூதியே ஔஷதம்" என்று சங்கரசங்கிதை கூறுகின்றது. மணி எனப்படுவது உலகத்தில் இரசகுளிகையை உணர்த்தும்: இந்தக் குளிகை கொண்டு சித்தர் ஆகாசகமன முதலியவற்றைச் செய்வார் என்பர், அங்ஙனம் சிவலிங்கமணி வழிபாட்டினால், இகலோக பரலோக சித்திகளையெல்லாம் ஒருவர் அடையலாம் என்பது பெறப்பட்டது.

# XII. லிங்கபேதம்

சிவலிங்கமானது அவ்வியக்தலிங்கம் எனவும், வியக்தாவியக்தலிங்கம் எனவும், வியக்தலிங்கம் எனவும் மூவகைப்படும். பீடமும் லிங்கமாயிருப்பது அவ்வியக்தலிங்கம். லிங்கத்திலே முகமுந் தோள்களும் வெளிப்படவிருப்பது வியக்தாவியக்தலிங்கம். எல்லா அவயங்களும் வெளிப்பட்டிருக்கும் சந்திரசேகரர் முதலிய இருபத்தைந்து மாகேசுவர வடிவங்களும் வியக்தலிங்கங்களாம்.

பின்னும் சிவலிங்கமானது அசலலிங்கம் எனவும், சலனலிங்கம் எனவும், சலாசலலிங்கம் எனவும்,. அசலசலலிங்கம் எனவும் நான்கு வகைப்படும். கோபுரம் விமானம் முதலியன அசலலிங்கம் எனவும், இதயத்திற் கற்பிக்கப்படும் சிவலிங்கம் சலன லிங்கம் எனவும், வான லிங்கம், இரத்ன லிங்கம் முதலியன சலாசலலிங்கம் எனவும், வேதிகையில் மண்டலமிட்டுப் பூசிக்கப்படின் அது அசலசல லிங்கம் எனவும்படும்.

வாணலிங்க முதலியன இஷ்டலிங்கமாகவும், பரார்த்த பூசையிற் சிவசந்நிதியில் அங்க லிங்கமாகவும் பூசிக்கப்படிற் சலலிங்கம் எனவும், பரார்த்தமாக ஸ்தாபிக்கப்படின் அசலலிங்கம் எனவும், நிற்றலாற்சலாசலம் எனப்படும். தீக்ஷைக்குச் சொல்லியவாறு வேதிகையிலிட்டுப் பூசிக்கப்படின் அசலம் எனவும், நிற்றலான் அசலசலம் எனப்படும்.

தூபி ஸ்தூலலிங்கமாகும். விமானத்துள் எழுந்தருளி யிருக்கும் சிவலிங்கம் சூக்குமலிங்கம் எனவும், அதற்கு முன் உள்ள பலிபீடம் பத்திரலிங்கம் எனவும் படும். இவ்வுண்மை நோக்கித் திருமூலநாயனார்

தூய விமானமுந் தூலம தாகுமா
லாய சதாசிவ மாகுநற் சூக்குமம்
பாய பெலிபீடம் பத்திர லிங்கமா
மாய வரனிலை பாய்ந்துகொள் வார்கட்கே

என்று அருளிச்செய்தார். உயர்ந்த நான்கு வருணத்தாருள்

உறுப்புக்குறைந்தவர்களும், நான்கு வருணத்தாரல்லாத சங்கர சாதியாரும் தங்கள் தங்கள் அதிகாரானுகுணமாக ஆசாரியரிடத்துத் தீக்ஷை பெற்று.

தூவியினைக் கோபுரத்தை யீசனெனக் கண்டுதொழு பாவமறும் வாய்த்துறுமின்பம் என்று வருத்தமறவுய்யும்வழி என்னும் நூல் கூறியவாறு, தூபியையுங் கோபுரத்தையும் சிவபெருமானாகப் பாவித்து, அவற்றுக்கெதிரே பத்திர புஷ்பங்களைத் தூவித் துதித்தல் முறையாம்.

வேதத்திலே சொல்லப்பட்ட யாகசாலையே சிவாகமாதிகளிற் காணப்படும் ஆலயம் என்றும், அந்த யாகசாலையின் அக்கினியே சிவாலயத்துள்ள சிவலிங்கம் என்றும், யாகசாலையின் யூபஸ்தம்பமே சிவாலயத்தின் துவஜஸ்தம்பம் என்றும், யாகவேதியே பலிபீடம் என்றும், துவஜஸ்தம்பத்துக்குச் சமீபத்துள்ள நந்தியே பசு என்றுஞ் சிலர் கூறுவர். இந்தச்சாமியம் ஒருவாறு அங்கீகரிக்கப்படினும், முன்னர் வேதத்திலே சிவலிங்க வழிபாடு கூறப்படாது பின்னர்ச் சிவகாமத்திலேதான் அவ்வழிபாடு கூறப்பட்டதெனல் ஒர்போதும் ஒவ்வாது; அங்ஙனம் கூறின், வேதத்ினதும் ஆகமத்தினதும் உற்பத்திக்கு முற்பிற்பாடு கூற நேர்ந்து, வேதாகமோற்பத்தியை ஒருங்கு கூறும் அவ் வேதாகம புராணங்களுக்கெல்லாம் மாறுபடுமாதலின் என்க.

(24) 𑌅𑌜𑌰𑍂𑌪𑌂 𑌪𑌶𑍁𑌂 𑌹𑌤𑍍𑌵𑌾
𑌜𑍍𑌞𑌾𑌨 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌯𑍋𑌗𑌵𑌿𑌤𑍍 ।
𑌭𑌕𑍍𑌷𑌯𑍇𑌤𑍍𑌤𑌜 𑌸𑍍𑌯𑌾𑌮𑌿𑌷𑌂
𑌭𑌵𑌦𑍁𑌃𑌖𑌾𑌪 𑌹𑌾𑌰𑌕𑌂 ॥

அஜரூபம் பசும் ஹத்வா
ஞாநசஸ்திரேண யோகவித்।
பக்ஷயே தஜஸ்யாமிஷம்
பவதுக்காபஹாரகம் ॥

“ஆட்டுருபமாகிய பசுவைச் சிவஞானமாகிய அஸ்திரத்தினாற் சிவயோகியானவன் சங்கரித்து, சனனதுக்கத்தை ஒழித்தலாகிய ஆட்டு மாமிசத்தைப் புசிக்க’’ என்று சிவதருமங் கூறுமாற்றால், வேதத்தில் ஆடாகக் கொள்ளப்பட்டது சிவாகமத்திற் கூறப்பட்ட பசுவாம் என்றும், அவ்வாட்டைச் சங்கரித்தாலவது சிவஞானாப் பியாசத்தினால் ஆன்மாவின் பிறவியை அறுத்தலாம் என்றும், அஜ மாமிசத்தை உண்ணுதலாவது பிறவிக்கேதுவாகிய தற்போதமெனப்படும் பசு போதத்தை மேல் எழவொட்டாது சிவஞான வாயிலாக அடக்கிவிடுதலாம் என்றும் பொருள் கொள்ளக் கிடக்குமென்பதையும் ஈண்டுக் கூறலும் பொருத்தமாகாது போகாதென்க.

(25) ஶிவலிங்கம் த்ரிஸந்த்யமஹரஹரப்

யர்ச்சயேத் ।

சிவலிங்கம் திரிசந்தியமஹரஹரப்யர்ச்சயேத்|

“சிவலிங்கத்தைத் தினந்தோறும் காலை மாலை உச்சி என்னும் முப்பொழுதினும் பூசிக்க’’ என்று பஸ்மஜாபாலோபநிடதம் கூறுகின்றது.

(26) அங்குஷ்ட²மாத்ர: புருஷோ

மத்ய ஆத்மநி திஷ்ட²தி ।

ஈஶாநோ பூ⁴தப⁴வ்யஸ்ய

ந ததோ விஜுகுப்ஸதே ॥

அங்குஷ்ட மாத்ர புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி|
ஈசாநோ பூதபவ் யஸ்ய நததோ விசுகுப்சதே ||

“அங்குஷ்டப் பிரமாணத்தினராகிய புருஷர் இதயமத்தியில் நிற்பாராயினர்; அவர் இறந்தகால எதிர்காலத்துக்கும் ஈசானராதலின், எவர்க்கும் அஞ்சுவாரல்லர்’’ எனக் கடவல்லியுபநிடதத்தில் அங்குஷ்ட அளவினராகக் கூறப்பட்டவர் சிவபெருமானேயாம். இதுஅக்கடவல்லி மந்திரத்திற் காணப்படும் ரூடசப்தமாகிய ஈசானத்தினாற் புலப்படுகின்றது. இந்தச்

சிவபெருமான் உபாசகர் பொருட்டு லிங்கரூபமாக அவர்கள் இதயமத்தியிலே நிற்கின்றார். இந்தக் கடவல்லியுபநிடதத்தின் பொருளை ஆதாரமாகக்கொண்டே

(27) ஶஸ்நாஜெவ ஷ்ரஜிதஃ ।

சப்தாதேவ பிரமித: ।

"சுருதியினாலேயே [அங்குஷ்ட அளவினராக] அளக்கப்பட்டார்" என்று பொருள் கொள்ளுமாறு, வேதவியாச முனிவர் வேதாந்தசூத்திரத்திற் சூத்திரஞ்செய்தருளினர். இதனை ஓர்ந்த தீக்ஷிதயோகியார் பிறநயமாகும்புருடனங்குட்டப் பிரமிதிதனை விரும்பாம, லறவனே யுனதீசானநற்சுருதியாற் பரமென்று நிச்சயித்தோன் செறியும் வேதாந்தப் பொருளினைத் தெரிக்குஞ் சூத்திரஞ்செய்தவன் கருத்து, மிறைவநின் பெருமைகண்டதேயாகுமென்பராலாயவல்லவரே என்று சிவதத்துவ விவேகத்திற் கூறியருளினர்.

சுருதியிற் கண்டவாறு, ஸ்தாவரலிங்கம் சங்கமலிங்கம் என இரு லிங்கங்கள் உளவாமென்றும், ஸ்தாவரலிங்கமானது ஆலயத்துள் எழுந்தருளியிருக்கின்ற சிவலிங்கமாகும் என்றும், சங்கமலிங்கமானது பக்தர்களுடைய இதயத்துள் லிங்கமாம் என்றும் சிவாகமங்களினால் அறியப்படுகின்றது.

(28) லிஂமஂ த்விவிய ஊாவஹ்ாதஞஞஞா

சஞஜெவ ச ।

ஜஂமஜவஸ்ாவஜாநெந ஷ்ாவாஂ

நிஷ்ஞஂ ஹவெக் ॥

லிங்கம் துவிவித மாக்யாதம் சலம் சாசலமேவச।
ஜங்கமஸ்யாவமாநேந ஸ்தாவரம் நிஷ்பலம் பவேத்॥

"சலலிங்கம் அசலலிங்கம் என லிங்கம் இருதிறப்படும்; சலலிங்கமாகிய சங்கமலிங்கத்தை அவமதிப்பின், ஸ்தாவரலிங்கமாகிய அசல லிங்கத்தினாற் பிரயோசனம்

இல்லை'' யாம் என்று சிவாகமம் கூறிற்று. இது பற்றியே,

"ஈசனுக்கன்பில்லாரடியவர்க்கன்பில்லார்''

என்று சிவஞானசித்தியாரும் கூறுகின்றது. இது நிற்க.

புறப்பூசையில் உபயோகிக்கப்படும் லிங்கங்கள் பலதிறப்படும். பச்சைமண் லிங்கத்தினும் சுட்ட மண்லிங்கம் பதின் மடங்கு அதிகம். அதினும் தாருலிங்கம் பதின் மடங்கு அதிகம். அதினும் சைலலிங்கம் பதின்மடங்கு அதிகம். அதினும் லோகஜலிங்கம் நூறு மடங்கு அதிகம். அதினும் இரத்தினலிங்கம்.அனந்தமடங்கு அதிகம். அதினும் மணிலிங்கம் இலக்ஷ மடங்கு அதிகம். அதினும் வாணலிங்கம் கோடி மடங்கு அதிகம். அதினும் இரசலிங்கம் கோடிமடங்கு அதிகம். அதினும் அதிகம் சுயம்பு லிங்கம்.

ஆயிரம் சாளக்கிராமத்துக்குச் சமம் ஒரு சிவநாபம். ஆயிரம் சிவநாபத்துக்குச் சமம் ஒரு ஸ்படிகலிங்கம். பன்னிரண்டுலக்ஷம் ஸ்படிக லிங்கத்துக்குச் சமம் ஒருவாணலிங்கம்.

பாணாசுரன் ஒரு உழுந்து முதல் முழமீறாகவுள்ள லிங்கங்களை மந்திரங்கொண்டு பூசித்தமையால் அவ்விலிங்கம் பாணலிங்கம் எனப்படும். இந்த லிங்கங்களில் ஆவாகனம் வேண்டாது சிவசாந்நித்தியம் எப்போதும் உளதாம்.

லிங்காத்ரி, காளிகாகர்த்தம், ஸ்ரீகிரி, கன்னிகாச்சிரமம், கன்னியாதீர்த்தம், நேபாளம், மகேந்திரகிரி, அமரேசுவரம், என்னும் இடங்களே அவன் பூசித்த ஸ்தானங்களாம்.

நருமதை, கங்கை, யமுனை முதலிய புண்ணிய நதிகளிலே தோன்றிய லிங்கங்களைப் பிரமா, விஷ்ணு, தேவர், அசுரர் என்போர் பரார்த்தமாக ஸ்தாபித்துப் பூசித்தார்கள். அவரவராற் பூசிக்கப்பட்ட சிவலிங்கத்தில் அவரவர் ஆயுதங்கள் அடையாளமாயிருக்கும்.

(29) 𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍂𑌰𑍍𑌦𑍈𑌵𑌿𑌕𑌂𑌚𑍈𑌵 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂
𑌮𑌾𑌨𑍁𑌷𑌮𑌾𑌰𑍍𑌷𑌕𑌮𑍍 ।
𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂 𑌬𑌾𑌣𑌲𑌿𑌂𑌗𑌂 𑌚 𑌸𑌪𑍍𑌤𑍈𑌤𑍇
𑌲𑌿𑌂𑌗𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍂𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑍁𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌂 𑌦𑍇𑌵𑍈𑌰𑌰𑍍𑌚𑌨
𑌦𑍈𑌵𑌿𑌕𑌮𑍍 ।
𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌦𑍇𑌵𑌾𑌰𑍍𑌚𑌨𑌂 𑌚𑍈𑌵 𑌋𑌷𑌿𑌪𑍂𑌜𑌿𑌤
𑌮𑌾𑌰𑍍𑌷𑌕𑌮𑍍 ।
𑌮𑌾𑌨𑍁𑌷𑍈𑌃 𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑌂 𑌲𑌿𑌂𑌗𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂
𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍 ।
𑌅𑌸𑍁𑌰𑍈𑌃 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍈𑌃 𑌪𑍂𑌜𑍍𑌯𑌮𑌾𑌸𑍁𑌰𑌂
𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌬𑌾𑌣𑌨𑌾𑌮𑌜𑌲𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌤𑌜𑍍𑌜𑌾𑌤𑌂
𑌬𑌾𑌣𑌲𑌿𑌂𑌗𑌕𑌮𑍍।
𑌬𑌾𑌣𑍇𑌨 𑌪𑍂𑌜𑌿𑌤𑌂 𑌲𑌿𑌂𑌗𑌂
𑌬𑌾𑌣𑌲𑌿𑌂𑌗𑌮𑌿𑌹𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 ।

ஸ்வயம்பூர் தேவிகஞ் சைவ திவ்யம் மாநுஷமார்ஷகம், ராக்ஷசம் பாணலிங்கஞ்ச சப்தைதே லிங்கமுச்யதே, ஸ்வயம்பூ: சுவயமுத்பந்நம் தேவ்யர்ச்சநந்து தேவிகம், திவ்யம் தேவார்ச்சநம் சைவ இருஷிபூஜித மார்ஷகம், மாநுஷை ; ஸதாபிதம் லிங்கம் மாநுஷம் பரிகீர்த்திதம், அசுரை, ராக்ஷசை ; பூஜ்ய மாசுரம் ராக்ஷசம் பவேத், பாணநாம ஜலம் புரோக்தம் தஜ்ஜாதம் பாணலிங்ககம், பாணேந பூஜிதம் லிங்கம் பாணலிங்க மிஹோச்யதே.

"சுயம்புலிங்கம், தேவிலிங்கம், திவ்யலிங்கம், ஆர்ஷகலிங்கம், மானுஷலிங்கம், இராக்ஷசலிங்கம், ஆசுரலிங்கம் என லிங்கம் ஏழு வகைப்படும். தானே தோன்றியது சுயம்புலிங்கம் ( இது பருவதாகாரமாயுள்ளது]: தேவியினாலே பூசிக்கப்பட்ட லிங்கம் தேவிலிங்கம் ; தேவர்களால் ஸ்தாபிக்கப்பட்டது தைவிகலிங்கம்; இருக்ஷிகளாற் பூசிக்கப்பட்டது ஆர்ஷகலிங்கம், இராக்ஷசர்களாற் பூசிக்கப்பட்டது இராக்ஷசலிங்கம்; அசுரர்களால் ஸ்தாபிக்கப்பட்டது

ஆசுரலிங்கம்; பாணம் எனப்படுகின்ற ஜலத்திலே உற்பத்தியானது பாணலிங்கம் [எனப்படினும்], ஈண்டு பாணாசுரனாற் பூசிக்கப்பட்டதே பாணலிங்கம் எனப்படுகின்றது.''

உபலக்ஷணையினால் விநாயகர் சுப்பிரமணியரால் ஸ்தாபிக்கப்பட்டது காணலிங்கம் எனப்படும்.

சிதம்பரத்திலுள்ள பெரிய பருவதாகாரத் திருமூலத்தான சிவலிங்கம் போன்றன சுயம்புலிங்கம் எனவும், கச்சி ஏகம்பத்திற் காமாக்ஷியம்மையாற் பூசிக்கப்பட்ட ஏகாம்பரநாத மகாலிங்கம் தேவிலிங்கம் எனவும், திருச்செங்காட்டங்குடியில் விநாயகர் ஸ்தாபித்துப் பூசித்த கணபதீச்சர மகாலிங்க முதலியனவும், திருச்சேய்ஞ்ஞலூரிற் சுப்பிரமணியர் ஸ்தாபித்துப் பூசித்த சத்தி கிரீசுவரமகாலிங்க முதலியனவும் காணலிங்கம் எனவும், பிரமாவினாற் சீர்காழியில் ஸ்தாபித்துப் பூசிக்கப்பட்ட பிரமபுரீச மகாலிங்கமும், திருமாற்பேற்றில் விஷ்ணு பூசித்த மால்வணங்கீசுவர மகாலிங்கமும், விஷ்ணு வாமனாவதாரஞ் செய்து திருமாணிகுழியில் ஸ்தாபித்துப் பூசித்த மாணிக்கவரதேசுவர மகாலிங்கமும், திருக்கண்ணார்கோயிலில் இந்திரன் ஸ்தாபித்துப் பூசித்த கண்ணாயிரேசுவர மகாலிங்கமும் தைவிகலிங்கம் எனவும், திருக்குற்றாலத்தில் அகஸ்தியரால் ஸ்தாபித்துப் பூசிக்கப்பட்ட குறும்பலாவீசுர மகாலிங்கம் ஆரிட லிங்கம் எனவும், இடும்பாவனத்தில் இடும்பனால் ஸ்தாபித்துப் பூசிக்கப்பட்ட சற்குண நாதேசுவர மகாலிங்கம் இராக்ஷசலிங்கம் எனவும், திரு ஓணகாந்தன்றளியில் ஓணன் காந்தன் என்னும் இரு அசுரராற் பூசிக்கப்பட்ட ஓணகாந்தேசுவர மகாலிங்கம் ஆசுரலிங்கம் எனவும் படும்.

சௌராட்டிர தேசத்திற் சோமநாதலிங்கமும், ஸ்ரீசைலத்தில் மல்லிகார்ச்சுனலிங்கமும், உஜ்ஜினியில் மகாகாளலிங்கமும், ஓங்காரத்திற் பரமேசுவரலிங்கமும், இமாசலத்திற் கேதாரலிங்கமும், டாகினியிற் பீமச்சங்கரலிங்கமும், வாராணசியில் விசுவேசுவரலிங்கமும், கோதாவரியில் திரியம்பக லிங்கமும்,

சிதாபுரத்தில் வைத்தியநாதலிங்கமும், தாருகாவனத்தில் நாகேசுவரலிங்கமும், சேதுவில் இராமேசுவரலிங்கமும், சிவாலயத்திற் குசுமேச லிங்கமும் எனப் பன்னிரண்டு சோதிலிங்கங்கள் உளவாகக் கோடிருத்திரசங்கிதையிற் கூறப்படுகின்றது.

இந்தப் பன்னிரு சோதிலிங்கங்களின் திருநாமங்களைக் காலைப்போதில் எழுந்திருந்து ஸ்தோத்திரம் செய்பவர் பாவமெல்லாம் ஒழிந்து சகல சித்திகளையும் எய்துவரென்றும், இவ்விலிங்கங்களை யாவரும் அர்ச்சித்து வழிபடலாம் என்றும், இந்தத் துவாதச லிங்கங்களேயன்றி நினைத்தமாத்திரத்திற் பாவங்களை ஒழிக்கவல்ல பஞ்சபூதமகா லிங்கங்கள் ஐந்து உண்டு என்றும், அவை காஞ்சிபுரத்துப் பிருதிவி மயமான ஏகாம்பர லிங்கமும், காவேரி தீரத்தில் அப்புமயமான ஜம்புகேசுவரலிங்கமும், அருணாசலத்தில் அக்கினிமயமான அருணாசலலிங்கமும், பொன்முகலியாற்றில் வாயுமயமான ஸ்ரீகாளத்தி லிங்கமும், சிதம்பரத்தில் ஆகாயமயமான திருமூலலிங்கமுமாம் என்றும் இவ்வைந்து லிங்கங்களைக் கண்களினாற் தரிசித்தாலும், காதினாற் கேட்டாலும், வாயினாற் சொன்னாலும், மனத்தினாற் தியானித்தாலும், தூயராகி இஷ்டசித்தி எய்தப்பெறுவாரென்றும் அக்கோடி ருத்திரசங்கிதையிற் கூறப்படுகின்றது. இன்னும் அப்பன்னிரு சோதிலிங்கங்களுக்கும் உபலிங்கங்கள் உள்ளன. அவற்றை ஈண்டு விரிவஞ்சிக் கூறாது விடுத்தேன்.

(30) ஸவெஷாம் ஶிவஔிஂமாநாஂ ஊ்ரெந
ஸஂஸா நவிஶநெ ।
ஸவஔிஂமயீ ஶக்திஸவ
ஔிஂமயஂ ஜமக் ।
ஔிஂமயாநி பூதாநி ஸவஂஔிஂமெ
ப்ரதிஷ்திதஂ ।

சர்வேஷாம் சிவலிங்காநாம் முநே சங்கியா ந வித்யதே|
சர்வலிங்கமயீ பூமி : சர்வலிங்கமயம் ஜகத்,
லிங்கமயாநி தீர்த்தானி சர்வம் லிங்கே பிரதிஷ்டிதம்.

"முனிவரே ! சிவலிங்கம் அனைத்துக்கும் கணக்கே இல்லை; பூமியோ லிங்கமயமாய் இருக்கின்றது; பிரபஞ்சமனைத்தும் லிங்க மயமே; [கங்கை முதலிய] சகல, தீர்த்தங்களும் லிங்கமயமே; உலகமுழுமையும் லிங்கத்திலே அடங்கியுள்ளன" பூமியிலே போலப் பாதாளத்தினும், சுவர்க்கத்தினும், லிங்கங்கள் இருக்கின்றன. பூமியிலிள்ள மனிதர்களும், பாதாளத்துள்ள நாகர்களும், சுவர்க்கத்துள்ள தேவர்களும், இராக்ஷதர்களுமாகிய எல்லோரும் சிவலிங்க பூசை செய்கின்றார்கள். சராசரப் பிரபஞ்சமெங்கும் ஆன்மாக்களை அநுக்கிரகிக்கும் பொருட்டுச் சிவபெருமான் லிங்கரூபமாக விளங்குகின்றார். அன்பினோடு வழிபடும் யாவர்க்கும் அவ்வவ்விடங்களிலே வெளிப்பட்டு நின்று அவரவர் வேண்டிய இஷ்டசித்திகளை அருளுகின்றார். ஆன்மாக்கள் தம்மை வழிபட்டு உய்யும் பொருட்டே சிவபெருமான் லிங்கரூபத்தை வகித்திருக்கின்றார்.

## XIII. ஷடாதாரக்ஷேத்திரங்கள்

(31) 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑍍𑌡𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌗𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌦𑍍𑌦𑌿𑌶𑌾𑌜𑍍𑌞𑌨𑌃 ।
𑌕𑌟𑌿𑌸𑍍𑌥𑌸𑍍𑌵𑌾𑌧𑌾𑌰𑍇 𑌷𑌟𑍍𑌸𑍁 𑌸𑌰𑍍𑌵𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑌾𑌃 ।
𑌸𑌂𑌮𑌾𑌰𑍍𑌗𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑍈𑌮𑌾𑌰𑍍𑌗𑍇 𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌯𑌾𑌂 𑌜𑌾𑌨𑌾𑌰𑍍𑌗𑍇𑌶𑌕𑍈 ।
𑌮𑍂𑌲𑌾𑌧𑌾𑌰𑌾𑌦𑌿𑌷𑌟𑍍𑌚𑌕𑍍𑌰𑍇 𑌆𑌧𑌾𑌰𑌾𑌣𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑌿 𑌹𑌿 ।
𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌮𑍂𑌲𑌾𑌧𑌾𑌰𑌾𑌣𑌿 𑌷𑌟𑍍𑌚𑌕𑍍𑌰𑌕𑌾𑌃 ।
𑌮𑍂𑌲𑌾𑌧𑌾𑌰𑌂 𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌥𑌿𑌤𑌂 𑌕𑌮𑌲𑌾𑌲𑌯𑌃 ।
𑌸𑍍𑌵𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌚𑍍𑌚 𑌗𑌜𑌾𑌰𑌣𑍍𑌯𑌂 𑌮𑌹𑌾𑌸𑍍𑌥𑌲𑌮𑍍 ।
𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌮𑌣𑌿𑌪𑍂𑌰𑌂 𑌚 𑌅𑌰𑍁𑌣𑌾𑌚𑌲𑌨𑌾𑌯𑌕𑌮𑍍 ।
𑌹𑍃𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌚𑍍𑌚 𑌚𑌿𑌦𑌂𑌬𑌰𑌂 𑌤𑍁 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍 ।
𑌶𑍍𑌰𑍀𑌕𑌾𑌲𑌹𑌸𑍍𑌤𑌿𑌨𑌗𑌰𑍇 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।

𑌵𑌾𑌰𑌾𑌣𑌸𑍀 𑌮𑌹𑌾𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑌾𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍁𑌵𑌃 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑌂𑌤𑍁 𑌶𑍍𑌰𑍀𑌕𑍈𑌲𑌾𑌸𑌂 𑌮𑌹𑌤𑍍𑌸𑍍𑌥𑌲𑌮𑍍 ।
𑌆𑌧𑌾𑌰𑌾𑌤𑍀𑌤𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌹𑌾𑌲𑌾𑌸𑍍𑌯𑌂 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌾𑌨𑍍𑌤𑌕𑌮𑍍 ॥

பிரம்மாண்டம் ப்ரம்மணோ காத்ரம் ஜாநீயாந் மதிமாந் ஜந:|
கட்யத: சப்த பாதாளந் ததூர்த்வே சப்தலோககா: |
அங்குஷ்டே பிரபதே குல்ப்பே ஜங்காயாம் ஜாநு தேசகே |
ஊருமத்யே சோருமூலே பாதாளாநிஹி, ஸ்திதாநி ஹி |
பூராதி சப்தலோகாச்ச மூலாதாராதிசு கிரமாத் |
மூலாதாரம் விரிஞ்சஸ்ய பிரதிதம் கமலாலய: |
ஸ்வாதிஷ்டாநம் விதாதுச்ச கஜாரண்யம் மஹாஸ்தலம் |
விச்வசிருண் மணிபூரஞ்சஹ்ய நலாசலநாகம் |
ஹ்ருத் புண்டரீகம் தாதுச்ச சிதம்பர முதீரிதம் |
ஸ்ரீமத் தக்ஷிணை கைலாசோ விசுத்திஸ்தாநமத்புதம்
வாராணசி மஹா க்ஷேத்ர மாஞ்ஞாஸ்தாநம் ஸ்வயம்புவ: |
பிரம்மணோ பிரம்மரந்திரந்து ஸ்ரீகைலாசம் மஹத்ஸ்தலம் |
ஆதாரதீத மவ்யக்தம் ஹாலாஸ்யம் த்வாதசாந்தகம்.

"பிரம்மாண்டம் பிரமாவின் சரீரம்:, கீழ் ஏழு உலகங்கள் அரைக்குக் கீழ்பட்டனவாகிய காற்பெருவிரல், புறவடி, பரடு, கணைக்கால், முழந்தாள், தொடைநடு, தொடை மூலம் என்பவைகளாம்; மேல் ஏழு உலகமும் அரைக்கு மேற்பட்டனவாகிய மூலாதாராதிகளில் முறையேயுள்ள பூமுதலிய சப்தலோகங்களாம்; பிரமாவின் மூலாதாரம் கமலாலயம்; இதிற் சிவபிரான் தியாகேசர் எனப்படுபவர். [லிங்கத்தானமாகிய] சுவாதிஷ்டானம் திருவானைகா; அங்கே அவர் ஜம்புநாதர் எனப்படுபவர்; நாபித்தானமாகிய மணிபூரம் அருணாசலம் அங்கே அவர் அருணாசலேசுவரர் எனப்படுபவர்; இதய ஸ்தானமாகிய அநாஹதம் சிதம்பரம், அங்கே அவர் சபாபதி எனப்படுபவர்; கண்டத்தானமாகிய விசுத்தி திருக்காளத்தி, அங்கே அவர் காளஹஸ்தீசுவரர் எனப்படுபவர்; புருவ மத்தியஸ்தானமாகிய ஆஞ்ஞை காசி, அவர் விசுவநாதர் எனப்படுபவ பிரமரந்திரம்

கைலாசம், அங்கே அவர் ஸ்ரீகண்ட பரமேசுவரர் எனப்படுபவர்; ஆதாராதீதமாகிய துவாதசாந்தம் மதுரை, இங்கே அவர் சுந்தரேசுவரர் எனப்படுபவர்'' என்று அகஸ்தியசங்கிதை கூறுகின்றது.

## XIV. பிறக்க இறக்கத் தரிசிக்க முத்திதருந்தலங்கள்

பிறந்தில மாரூர் தன்னிற் பேசிய காசி மேவி
யிறந்தில மிரண்டு முத்தி யின்பமும் பின்ப தாநா
முறைந்திடுந் தில்லை ஞான யோகமார் தானமாமாற்
செறிந்தடி காணச் சீவன் முத்தராய்த் திரிய லாமே.

"திருவாரூரிலே பிறந்தேமில்லை, காசியிலே இறந்தேமில்லை [செனன மரணங்களாலாகும்] இவ்விரண்டு முத்தி இன்பங்களும் நெடுங்காலத்தின் பின்னர்ச் சித்திப்பனவாம்; தில்லைவனம் ஞான யோகஸ்தானம்; இதிலிருந்து திருவடிகளைத் தரிசிப்பவர் சீவன் முத்தராய்த் திரியலாம்'' என்று கோயிற்புராணம் கூறுகின்றது.

## XV.சிவலிங்கத்தைச்சரியையாதி பாதத்தினர் வழிபடுமாறு

சிவாகமத்திற் கூறப்பட்ட சரியாபாதத்தினரும், கிரியாபாதத்தினரும், யோக பாதத்தினரும், ஞானபாதத்தினரும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை வழிபடுங்கால், பகுத்தறிதலில்லாது சிவலிங்க முதலிய திருமேனியையே சிவமெனக் கண்டு வழிபடும் சரியாபாதத்தினர்க்குச் சிவபெருமான் அங்கே வெளிப்படாது நின்று அருள்செய்வர். நிஷ்களப்பொருளாகிய சிவபிரான் ஈசானமுதலிய மந்திரங்களினாற் சிவலிங்க முதலிய திருவுருக் கொண்டாரென்று மந்திரநியாசத்தினால் வழிபடும் கிரியாபாதத்தினர்க்கு, கடைந்தவிடத்துத் தோன்றும் அக்கினிபோல அவ்வம்

மந்திரங்களினால் அவ்வவர் விரும்பிய வடிவமாய் அவ்வத்திருமேனிகளில் அவ்வப்பொழுது வெளிப்பட்டு நின்று அருள் செய்வர். இதயமெங்கும் வியாபித்திருக்கும் சிவபெருமான் இந்தச் சிவலிங்க முதலியவற்றினும் அதிஷ்டித்திருந்து பூசை கொண்டருளுவார் என்று சாத்திய மந்திரங்களினால் வழிபடும் யோகபாதத்தினர்க்குச் சிவபெருமான் அவ்வம் மந்திரங்களினால் அவ்வவர் விரும்பிய வடிவமாய் அவ்வத்திருமேனிகளிற் கறந்தவிடத்துத் தோன்றும் பால்போல அவ்வப்பொழுது வெளிப்பட்டு நின்று அருள்செய்ச்ர். மேலே கூறப்பட்ட முத்திறத்தாரும் போல ஓரிடத்திற் குறியாது அன்பு மாத்திரத்தினால் அங்கே வழிபடும் ஞான பாதத்தினர்க்குச் சிவபெருமான் கன்றை நினைந்த தலையீற்றுப் பசுவின் முலைப் பால் போலக் கருணை மிகுதியினால் அவ்வன்பேதாமாகி எப்பொழுதும் வெளிப்பட்டு நின்று அருள் செய்வர். இவ்வுண்மை,

திருக்கோயிலுள்ளிருக்குந்திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச்சிவனுறைவனங்கே
யுருக்கோலிமந்திரத்தாலெனநினையுமவர்க்கு
முன்னெங்குமிலனிங்குமுளனென்பார்க்கும்
விருப்பாயவடிவாகியிந்தனத்தினெரிபோன்
மந்திரத்தின்வந்துதித்துமிகுஞ்சுரபிக்கெங்கு
முருக்காணவொண்ணாதபான்முலைப்பால்விம்மி
யொழுகுவதுபோல்வெளிப்பட்டருளுவனன்பர்க்கே

என்னுஞ் சிவஞானசித்தியார்ச் செய்யுளால் அறியப்படும்.

## XVI. எப்பூசையினும் சிவலிங்கபூசை சிறந்தமை

(32) க்ருத்வா ஹம்ஸிகாம் விஷ்ணும்
ப்ரணாமம் ஸஹஸ்ரஶ: ।
ப்ராஹ்மண: பூஜயேத்வம் ச பஞ்ச
யஜ்ஞபாராயணா: ॥

ஆதித்யமம்பிகாம் விஷ்ணும்
கணநாதம் மஹேச்வரம் ।
பிராம்மணா: பூஜயேத் பஞ்ச பஞ்ச
யக்ஞுபராயணா: ॥

"ஐந்து யஞ்ஞுபராயணர்களாகிய பிராமணர் ஆதித்யன், அம்பிகை, விஷ்ணு, கணேசர், மகாதேவர் என்னும் ஐவரையும் பூசிக்க" என்று மனுஸ்மிருதி கூறுகின்றது. இவ்வைவரையும் சமமாகக் கொண்டு பூசிக்கவேண்டுமா, இவ்வைவருள் ஒருவரை மற்றெல்லோரினும் சிரேஷ்டராகக்கொண்டு வழிபடல் வேண்டுமா என்னும் ஆக்ஷேபம் நிகழுங்கால்,

(33) நதத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே ।

நதத்சமச்சாப் யதிகச்ச திருச்யதே.

"சிவபெருமானுக்கு ஒப்பாரும், மிக்காரு மில்லை" என்று சுவேதாசுவதரோபநிடதம் கூறுகின்றமையானும்,

காரெழில் புரையுமேனிக்கண்ணனையென்னைப் பின்னை
யாரையும் புகழும் வேதமரன்றனைத் துதித்ததேபோலோ
ருரை விளம்பிற்றுண்டோ வுரைத்ததுமுகமனென்றே
பேருலகறிய முன்னும் பின்னரும் விலக்கிற்றன்றே

என்னும் கந்தபுராணச் செய்யுளால் விஷ்ணுவையும், பிரமாவையும் பிறரையும் வேதமானது துதிக்கின்றது; சிவபெருமானைத் துதித்ததுபோல மற்றொருவரையுப் புகழ்ந்ததுண்டோ; அங்ஙனம் புகழ்ந்தமையும் முகமனேயாம். கர்மகாண்டமாகிய இருக்காதி வேதங்களின் சிரசுகளாகிய உபநிடதங்களுக்கெல்லாம் சிகையாய் விளங்கும் அதர்வசிகோபநிடதமானது.

(34) ஈசானம் த்யேயம் ... ।
ஸர்வமிதம் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த்ராஸ்தே ஸம்ப்ரஸூயந்தே
ஸர்வாணி சேந்த்ரியாணி ஸஹபூதை: ।
காரணம் காரணானாம் த்யாதா த்யேயா ।

கா ரண ஞ¬ தெஸ்ய ஸூவைஷுய ஸ்

ஸ்ம் வஞஸூவெஷுஈரஸ்ர ம் ஆ¬ ரா காஸஉதெஸ் ।

தியாயீதேசாநம் பிரத்யாயிதவ்யம் |
சர்வமிதம் பிரம்ம விஷ்ணுருத்ரேந்திராஸ்தே சம்பிரசூயந்தே|
சர்வாணி சேந்திரியாணி சஹபூதை:|
ந காரணம் காரணாநாம் தாதா தியாதா|
காரணந்து தியேய: சர்வைச்வர்ய சம்பந்ந:
சர்வேச்வர: சம்பு ராகாசமத்யே.

"மிகவும் தியானிக்கற்பாலராகிய ஈசானரைத் தியானிக்க: அந்தப் பிரம விஷ்ணு உருத்திர இந்திரர்களாகிய இவரெல்லாம் உற்பத்தியாகின்றனர்; எல்லா இந்திரியங்களும் பூதங்களுடனே கூட உற்பத்தியாகின்றன; காரணமும் காரணங்களைப் படைத்தோரும் கருதினோருமாகியவர் உற்பவித்தலின்று; காரணமும் சர்வைசுவரிய சம்பன்னரும் சர்வேசுவரும் சம்புவுமாகியவரே ஆகாயமத்தியிற்றியானிக் கற்பாலர்'' என முதற்கண்ணே மற்றைத் தேவர்களை விலக்குதலோடமையாது, அவ்வதர்வசிகோபநிடதமானது.

(35) ஙிவ ஊகொ தெஸ்யஙிவம் காஈஸ்வஷு
உநஹுரிதஜஸ் ஸஉாவூாயவஷுஙிவா ।

சிவ ஏகோ தியேய: சிவங்கர: சர்வ
மந்யத் பரிதியஜ்ய சமாப்தாதர்வசிகா.

"மற்றெல்லாம் விட்டுச் சுகத்தைச் செய்பவராகிய சிவபெருமான் ஒருவரே தியானிக்கற்பாலர் அதர்வசிகை முற்றிற்று'' என்று அப்பிரமாதி தேவர்களை இறுதிக் கண்ணும் விலக்குகின்றமையானும், சிவபெருமானே பஞ்சமூர்த்திகளுள்ளும் சிரேஷ்டராகக் கொண்டு வழிபடற்பாலர் என்பது பெறப்பட்டது.

(36) ஞஹ்ராதீநாம் ஒவாநாம் ஜநகொ உஹாஒவ
ஜதி ஒஸாசஸ்தெ ।

𑌦𑍍𑌯𑌾𑌵𑌾 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍋𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌗𑍍𑌨𑍇𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌭𑍂𑌤-
𑌯𑌮𑌸𑍍𑌯 𑌚 ।
𑌵𑌰𑍁𑌣𑌸𑍍𑌯 𑌶𑌶𑌾𑌙𑍍𑌕𑌸𑍍𑌯 𑌜𑌨𑌿𑌤𑌾
𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ।

பிரம்மாதீநாம் தேவாநாம் ஜநகோ மஹாதேவ
இதிசோச்யதே |
தியா வா பிருதிவ்யோரிந்திராக்நேர் விஷ்ணோயாது
யமஸ்யச |
வருணஸ்ய சசாங்கஸ்ய ஜநிதா
பரமேச்வர: |

"பிரமா முதலிய தேவர்களுக்குப் பிதாவாயுள்ளார் சிவபிரான் என்று சொல்லப்படுகின்றது; ஆகாயம், பூமி, பிருதிவி, இந்திரன், அக்கினி, விஷ்ணு, பூதம், யமன், வருணன், சந்திரன், என்போர்க்கும் பிதாவாயுள்ளார் பரமேசுவரன்" என்று பிரமாண்டபுராணங் கூறுகின்றது.

## XVII. சிவலிங்கத்தை இன்னார் இன்னார் பூசித்து இன்ன இன்ன பயன் பெற்றார் என்றமை

விஷ்ணு காசி க்ஷேத்திரத்தின்கண்ணே பதினாயிரம் வருஷம் தவஞ்செய்து சிவலிங்கப்பெருமானைப் பூசித்துத் தமது உத்தமமான பதவியையும், சமஸ்த உலகங்களை ரக்ஷிக்கும் உரிமையையும் அடையுமாறு பட்டாபிஷேகஞ் செய்யப்பட்டார்.

பிரமா காஞ்சிபுரத்திற்சென்று சிவலிங்கப் பெருமானைப் பூசித்துச் சிருஷ்டிக்கும் அதிகாரத்தையும், சரசுவதிக்கு நாயகராயிருக்கும் தன்மையையும் அன்னவாகன முதலியவற்றையும் பெற்றார். இங்ஙனம் இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானர் என்னும், அஷ்டதிக் பாலர்களும் முறையே ஸ்ரீசைலத்தினும், திருவண்ணாமலையினும், கேதாரத்தினும், கோகர்ணத்தினும், ஜம்புகேசுவரத்தினும்,

திருக்காளத்தியினும், சித்தவடத்தினும், திருவாரூரினும் சிவலிங்கப் பெருமானைப் பூசித்துத் தத்தம் திசையின் ஆதிபத்தியத்தையும், வாகனங்களையும், ஆயுதங்களையும், சிவபெருமானிடத்திற் பெற்றுப் பெருமையோடு வாழ்ந்திருக்கின்றார்கள்.

திக்குபாலர்கள் மாத்திரமா ! சிவலிங்க பூஜா விசேஷத்தினாற் சூரிய சந்திரர்கள் சிவபெருமானுடைய நிவாசஸ்தானமாகிய மகாமேருவைப் பிரதக்ஷிணஞ் செய்கின்றார்கள்; செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி என்போர் முறையே திருவிடைமருதூர், மதுரை, சேது, திருவெண்காடு, வேதாரணியம் என்னும் க்ஷேத்திரங்களிலே சிவலிங்கப் பெருமானைப் பூசித்து வேண்டிய வரங்களைப் பெற்றுத் துன்பம் நீங்கி இன்பமாய் வாழ்கின்றார்கள்.

சப்த ரிஷிகள் சிதம்பரத்திற் சபாநாயகரைப் பூசித்துக் கிரகங்களுக்கெல்லாம் மேலே தங்கள் இருப்பிடத்தைப் பெற்றுத் தேகாவசானத்தில் மோக்ஷத்தை அடைதற்குரிய திருவருளையும் பெற்றுள்ளார்கள்.

துருவன் ஸ்ரீகாசிவிசுவநாதப் பெருமானைப் பூசித்து நவக்கிரக மண்டலம், நக்ஷத்திரமண்டலம், சப்தரிஷிமண்டலம் என்பவற்றுக்கெல்லாம் மேலே முளைக்கட்டை போலாகிநின்று, அவற்றைச் சுற்றுவிக்கின்றான்.

ஆதிசேஷன் கும்பகோணத்திற் சிவபெருமானைப் பூசித்துப் பூமிபாரத்தைத் தாங்குகின்றான்.

இங்ஙனம் பூமி, மலைச்சிகரம், நதிக்கரை, முதலிய எவ்விடங்களினும் தேவர்கள், இருஷிகள், அசுரர், சித்தர், கருடர், யக்ஷர், வித்தியாதரர், மஹோரகர், கின்னரர், மாமுனிவர், கிம்புருடர், மானிடர் முதலிய எல்லோரும் சிவலிங்கப் பெருமானைப் பூசித்துத் தத்தம் பதங்களை அடைந்து இன்பத்தோடு வாழ்கின்றார். சிலர் மேகாதிபராயும், சிலர் திக்கயங்களாயும், சிலர் அட்டமா நாகங்களாயும் சிரர் ஏழு குல பருவதங்களாயுமாயினார்.

எவ்வெவர்க்கு எவ்வெவரதிபர்களாயிருக்கின்றார்களோ, அவ்வவரெல்லாம் சிவபிரான் திருவருளினாலே அவ்வவ் வாதிபத்தியங்களைப் பெற்றிருக்கின்றார். சிவலிங்க பூசையின் மகிமையினாற் சிலர் சித்தராயினார். சிலர் கபிலர் முதலிய ஒன்பது சித்தயோகிகளாயினார்.

அபுத்திபூருவமாகச் சிவராத்திரிதினத்தில் ஓர் குருட்டுப் பறைச்சி கோகர்ணத்தில் எறிந்த வில்வத்தையும், இராமுழுமையும் நித்திரை யொழித்தற்காக வேடன் ஒருவன் வில்வ மரத்திலிருந்து ஒவ்வொன்றாகப் பறித்துக் கீழே இட்ட வில்வங்களையும் சிவலிங்கப் பெருமானேற்று அவர்களுக்கு அநுக்கிரகிப்பாரேல், அப்பெருமானுடைய கருணைக்கு ஓர் அளவு காண்டல் அரிதாமன்றே!

சிவலிங்க பூஜாபலத்தினாலே சிலர் சிவாசலோக்கியத்தையும், சிலர் சிவசாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியங்களையும் அடைந்திருகின்றார்கள். சிவலிங்க பூஜாபலத்தினாலே தேவர் அசுரர் மானுடராயினோர் மிகுந்த ஐசுவரியங்களோடு வாழ்கின்றார்கள். வெற்றி வேண்டுமென்றே அநேகர் சிவலிங்கப்பெருமானைப் பூசித்துச் சத்துருக்களை செயித்துப் பாராண்டும், சிலர் வேண்டிய வேண்டியாங்கு புத்திரர், பெண்டிர், பசுக்கள், குதிரை, சவுந்தரியம், கொடை, சத்தியம், பராக்கிரமம் என்பவற்றை அடைந்திருக்கின்றார்கள்.

இங்ஙனம் பிரமா விஷ்ணு முதலாயினோர் இன்ன இன்ன காலத்திலே இன்ன இன்ன காரணமாகச் சிவபிரானைப் பூசித்து இன்ன இன்ன வரங்களைப் பெற்றாரென்னும் சரித்திரங்களை எடுத்துக்கூறப்புகின் அவை மிக விரியுமென்றஞ்சிக் கூறாது விடுக்கப்பட்டன.

(37) ஶிவஷவவதிஸ்ஸ ஹஃ வஶவொவயஜெவஹி ।
ஹஃஜாம் ஶ்ரீமாநிஷெவஸ ஶங்கரஸ்ரா ஷூஷாஜிஹிஃ।
வநதிஷூவைஷ்வ விரிநா வஜிதாநி நிஜஶநஃ ॥

சிவ ஏவ பதி: சம்பு : பசவோ வயமேவஹி |
பூம்யாம் லிங்காநி தேவஸ்ய சங்கரஸ்யாமதாதிபி:|
பிரதிஷ்டாப்யைவ வி திநா பூஜிதாநி நிதர்சநம் |

"சிவபெருமானாகிய சம்புவே பதி: [பிரமா முதலிய] நாங்கள் பசுக்களன்றோ; [பிரம விஷ்ணுக்களாகிய] எங்களாலும் பிறராலும் பூமியின் கண்ணே சிவலிங்கங்கள் ஸ்தாபித்து விதிப்பிரகாரம் பூசிக்கப்பட்டமையே அதற்குச் சான்று'' என்று சிவரகசியகண்டத்துச் தக்ஷகாண்டம் கூறுகின்றது.

## XVIII. பரார்த்தலிங்கம்

(38) 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌰𑌕𑍍𑌷𑌣𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌦𑌿𑌷𑍁 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃 ।
𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑌂 𑌵𑌿𑌧𑌿𑌨𑌾 𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌸𑍁𑌰𑍈𑌰𑍍𑌵𑌾 𑌮𑍁𑌨𑌿𑌭𑌿𑌰𑍍𑌨𑌰𑍈𑌃।
𑌤𑌤𑍍𑌪𑌰𑌾𑌰𑍍𑌥𑌂 𑌸𑌮𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 (𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌫𑌲𑌮𑍍॥)

சர்வேஷாம் ரக்ஷணார்த்தாய கிராமாதிஷு விசேஷத: |
ஸ்தாபிதம் விதிநா லிங்கம் சுரைர்வா முநிபிர் நரை:।
தத்பரார்த்தம் சமாக்கியாதம் [சர்வேஷா மாத்மந: பலம்.]

"உலகத்துள்ள ஆன்மாக்கள் அனைவரையும் அநுகிரகிக்கும் பொருட்டுத் தேவர்களாலும், இருஷிகளாலும், மனிதர்களாலும், கிராமாதிகளில் விதிப்படி விசேஷமாக ஸ்தாபிக்கப்பட்ட லிங்கம் பரார்த்தலிங்கம் எனப்படும்'' எனவும்,

(39) 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌰𑌕𑍍𑌷𑌾𑌰𑍍𑌥𑌮𑌿𑌷𑍍𑌟𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌰𑍍𑌚𑌨𑌂 𑌗𑍃𑌹𑍇।
𑌆𑌤𑍍𑌮𑌾𑌰𑍍𑌥𑌮𑌿𑌤𑌿 𑌵𑌿𑌖𑍍𑌯𑌾𑌤𑌂......... ॥

சர்வேஷா மாத்மரக்ஷார்த்தமிஷ்ட லிங்கார்ச்சநம் கிருஹே|
ஆத்மார்த்தமிதி விக்யாதம். ||

"எல்லோரும் தங்கள் ஆன்மரக்ஷையின் பொருட்டுத் [தத்தம்] கிருகத்திற் பூசிக்கும் இஷ்டலிங்கம் ஆன்மார்த்தலிங்கம் எனப்படும்'' எனவும் காரணாகமங் கூறுகின்றது.

# XIX. ஆன்மார்த்தலிங்கம்

ஆசாரியர் விசேஷதீக்ஷை செய்து சீடனை நோக்கி "நீ உள்ளளவும் கைவிடாது இவரை நாடோறும் பூசி" என்று அநுமதி செய்து, "அடியேன் சரீரமுள்ளவரையும் சிவபூசை செய்தன்றி ஒன்றும் உட்கொள்ளேன்" என்று பிரதிஞ்ஞை செய்வித்துக் கொண்டு கொடுக்க, அவன் வாங்கிப் பூசிக்கும் லிங்கம் இஷ்டலிங்கம் எனவும் ஆன்மார்த்தலிங்கம் எனவும்படும்.

(40) 𑌶𑍈𑌲𑌜𑌂 𑌰𑌤𑍍𑌨𑌜𑌂 𑌚𑍈𑌵
𑌲𑍋𑌹𑌜𑌂 𑌦𑌾𑌰𑍁𑌜𑌂 𑌤𑌥𑌾 ।
𑌮𑍃𑌣𑍍𑌮𑌯𑌂 𑌕𑍍𑌷𑌣𑌿𑌕𑌂 𑌚𑍈𑌵
𑌷𑌡𑍍𑌵𑌿𑌧𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

சைலஜம் ர த்நஜஞ்சைவ
லோஹஜம் தாருஜம் ததா,
மிருண்மயம்க்ஷணிகஞ்சைவ
ஷட்விதம் லிங்கமுச்யதே.

"சைலலிங்கம், இரத்தினலிங்கம், லோஹஜ லிங்கம், தாருஜலிங்கம், மிருண்மயலிங்கம், க்ஷணி லிங்கம் என இஷ்டலிங்கம் ஆறு வகைப்படும்."

பிராமணர் முதலிய நால்வருணத்தாரும் அநுலோமர் அறுவருமாகிய பத்துச் சாதியாருள்ளும் அங்கக் குறைவுபாடில்லாதவர்கள் இஷ்டலிங்க பூஜைக்கு அதிகாரிகள். இவருள்ளும் நோயிலராய் இடம் பொருள் ஏவலுடையராய், சிவபூஜாவிதி பிராயச்சித்தவிதி முதலியவற்றை நன்றாய் அறிந்தவராய், அறிந்தவாறு அநுஷ்டிக்க வல்லவராயுள்ளார் மாத்திரமே சைலமுதலிய சிவலிங்கப் பிரதிஷ்டை செய்வித்துக் கொண்டு சிவபூசை செய்யலாம்; மற்றெல்லோரும் க்ஷணிக லிங்க பூசை செய்யக்கடவர். சிவலிங்கங்களைப் பரீக்ஷை செய்யுமுறை முதலியவைகள் சிவாகமங்களில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. க்ஷணிகலிங்கமாவது பூசித்தவுடனே விடப்படும் லிங்கமாம்.

(41) 𑌸𑌿𑌕𑌤𑌤𑌣𑍍𑌡𑍁𑌲𑌂 𑌚𑌾𑌨𑍍𑌨𑌂 𑌨𑌦𑍀𑌮𑍃𑌦𑍍𑌗𑍋𑌮𑌯𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌨𑌵𑌨𑍀𑌤𑌂 𑌚 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌂 𑌭𑌸𑍍𑌮𑌚𑌨𑍍𑌦𑌨 𑌕𑍂𑌰𑍍𑌚𑌕𑌮𑍍 ।
𑌪𑍁𑌷𑍍𑌪𑌮𑌾𑌲𑌾𑌗𑍁𑌡𑌂 𑌚𑍈𑌵 𑌕𑍍𑌷𑌣𑌿𑌕𑌂 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥

சிகதம் தண்டுலம் சாந்நம் நதீ மிருத் கோமயந் ததா,
நவநீதஞ்ச ருத்ராக்ஷம் பஸ்ம சந்தந கூர்ச்சகம்,
புஷ்பமாலாகுளஞ்சைவ க்ஷணிகம் துவாதசம் பவேத்.

"மணல், அரிசி, அன்னம், ஆற்றுமண், கோமயம், வெண்ணெய், உருத்திராக்ஷம், பஸ்மம், சந்தனம், கூர்ச்சம், புஷ்பமாலை, சர்க்கரை என க்ஷணகலிங்கம் பன்னிரண்டு வகைப்படும்.''

சிவலிங்கமாவது பீடலிங்க ரூபமாயுள்ளதென்று மேலே கூறப்பட்டதன்றோ. இது சிவசாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம், கன்ம சாதாக்கியம் என்னும் ஐந்தனுள் ஒன்றாகிய கன்மசாதாக்கியமாகும்.

## XX. பஞ்சசாதாக்கியங்கள்

### சிவ சாதாக்கியம்

"கிவசா தாக்கிய மென்ற திருப்பெய
ருவமைபில் சுத்த மாயையிலுண்டா
யதிசூக் குமமா யளவறு மொழியாய்
விதமிகு மம்பர மின்னின் விளங்கி
விதமுற வெங்கும் வியாபித்திடுமே.''

சிவசாதாக்கியமாவது சாந்தியாதீதை எனப் பெயரிய பராசக்தியிலுண்டாய், அதிசூக்குமமாய், அளவிலாச் சோதிமயமாய், ஆகாயத்தில் [தியானிப்பவர்களுக்கு] மின்னல்போல விளங்கி வியாபித்திருப்பதாகும்.

### அமூர்த்தி சாதாக்கியம்

"சாரு மமூர்த்தி சாதாக் கியமென்
றோதி யரூபை யாதலிற் பெயராய்க்

கலைகடந் தொருலிங்
காகாரமதாய்த் தொலைவில் கோடி சூரிய
ரொளியாய்த் தூணம தாகிச் சோதியி னூடே
காணரு மந்தர்க் கதமூர்த் தியதாய்
மேலைத் திவ்ய லிங்க மெனவு
மூலத் தம்ப மெனவு மொழிந்தனர்.''

அமூர்த்தி சதாக்கியமாவது சாந்தி எனப் பெயரிய ஆதிசக்திலுண்டாய், அரூபியாய், லிங்காகாரமாய், கோடிசூரியப் பிரகாசமாய், ஸ்தம்பாகிருதியாய்ச், சோதிக்குள்ளே காண்டற்கரிய அந்தர்க்கத மூர்த்தியாயிருக்கும் இது திவ்யலிங்கம் எனவும் மூலஸ்தம்பம் எனவும்படும்.

## மூர்த்தி சாதாக்கியம்

"எச்சமில் மூர்த்தி சாதாக் கியமென்
றிச்சை குணத்துட னெய்தலி னெய்திக்
கலையை யணுகலிற் காணு முருத்தரித்
தெரிதழற் பிழம்பா மிலிங்கம
துருவா யுச்சியி லொருதிரு முகமு மம்முகத்
தச்சமின் முக்கணு மாயிருப் பதுவே.''

மூர்த்தி சாதாக்கியமாவது வித்தை எனப் பெயரிய இச்சாசத்தியிலுண்டாய், சுத்தகுணமாகிய கலையைப் பொருந்துதலால், மூர்த்தி எனப் பெயர் படைத்து, காலாக்கினியை நிகர்த்த பிரகாசத்தை யுடையதாய், லிங்க வடிவாகி, அதன் ஊர்த்துவபாகத்தில் ஒரு திருமுகமும், அதில் அமைந்த முக்கண்களும் உடையதாயிருப்பது.

## கர்த்திரு சாதாக்கியம்

"கர்த்திரு சாதாக் கியப்பெயர் ஞானமென்
றத்த னெழிற்பெய ராதலி னாலும்
ஞான சத்தி யிலகுத லாலு
மூனமில் மறைக ளுரைத்திடும் மதுதான்

சுத்த மாதலிற் றூய்பளிங் கொளியா
யித்தகு திவ்ய லிங்கமு மாயதின்
மத்தியில் நாலு முகத்தொடுமன்னி
நலமிகு பன்னிரு நயன முடைத்தாய்
வலதுகை சூல மழுவா ளபய
மிடதுகை நாக மிலங்கிய பாசம்
படுமணி வரத மெனும்படை யேந்தி
யொடிவி லிக்கண முடனிருப்பதுவே.''

கர்த்திரு சாதாக்கியமாவது பிரதிஷ்டை எனப்படும் ஞான சத்தியினின்று தோற்றியதாய், தூயதாதலிற் பளிங்கொளியாய், திவ்யலிங்கமுமாய், மத்தியிலே நான்கு முகங்களும், பன்னிரு கண்களுமுடையதாய் வலக்கரங்களிற் சூலம், மழு, வாள், அபயம், என்பனவும், இடக்கரங்களில் நாகம், பாசம், மணி, வரதம், என்பனவும் அமையப்பெற்றதாய்க் குறைவற்ற இலக்கணத்தோடு இருப்பது.

### கன்ம சாதாக்கியம்

கன்ம சாதாக் கியகா ரணப்பெயர்
தொன்மைக் கிரியையிற் றோன்றலி
லுடைத்தா நாத மயமெனு நவிலுமி
லிங்கமும் பேதமில் விந்து மயமாம் பீடமுஞ்
சோர்வறக் கூடித் தொழிற்பட் டிருக்கும்.

கன்ம சாதாக்கியமாவது நிவிர்த்தி எனப்படும் கிரியையிலே தோன்றியதாய், நாதமயமாகிய லிங்கத்தையும், பிந்துமயமாகிய பீடத்தையும் பொருத்தித் தொழிற்பட்டிருப்பதாகும்.

## XXI. பூஜாபேதம்

(42) 𑌶𑍁𑌦𑍍𑌧𑌕𑍇𑌵𑌲 𑌮𑌿𑌶𑍍𑌰𑌂 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌯𑌜𑌨𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌵𑌾 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑌹𑌿𑌤𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌶𑌕𑍍𑌤𑌿 𑌸𑌂𑌯𑍁𑌤𑌮𑍍 ।
𑌸𑌕𑌲𑌾𑌦𑌿 𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌂 𑌮𑌿𑌶𑍍𑌰𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍 ॥

சுத்தகேவல சம்மிசிரமாத்மார்த்த யஜநம்பவேத் |
சுத்தம்வா சக்திரகிதம் கேவலம் சக்திசம்யுதம் |
சௌராதி சண்டபர்யந்தம் மிசிரஞ்சேதி பிரகீர்த்தி தம்||

"[சிவனடியார்கள் அன்பினோடு பூசிக்கும்] ஆன்மார்த்த பூசை சுத்தமும், கேவலமும், மிசிரமும் என மூவகைப்படும்; சிவலிங்கம் ஒன்றை மாத்திரம் பூசித்தல் சுத்தபூசையாம்; அவ்விலிங்கத்தோடு உமாதேவியாரையும் சேர்த்துப் பூசித்தல் கேவல பூசையாம்; [விநாயகர், ஸ்கந்தர், இடபதேவர் என்னும் இம்மூவரையும் அவ்விருவருடன் கூட்டி ஐவராகப் பூசித்தலும் கேவல பூசையாம்] சூரியன் [விநாயகர்] முதலாகச் சண்டேசுரர் இறுதியாக [விரித்துப் பூசித்த்ல் மிசிரபூசையாம்.'']

## XXII. ஷோடசோபசாராதி

இஷ்டலிங்க பூசை செய்யுமிடத்துச் சோடசோபசாரங் கொண்டேனும், தசோபசாரங் கொண்டேனும், பஞ்சோபசாரங் கொண்டேனும் அவரை வழிபடல் வேண்டும்

ஆவாகனம், ஆசனம், பாத்தியம், அர்க்கியம், ஆசமனம், ஸ்நானம், வஸ்திரம், உபவீதம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம், முகவாசம், ஸ்தோத்திரம், நமஸ்காரபிரதக்ஷிணம் என்பன ஷோடசோபசாரங்களாம். இன்றேல் ஆசனம், ஆவாகனம், பாத்தியம், ஆசமனம், அர்க்கியம், ஸ்நானம், வஸ்திரம், கந்தம், புஷ்பம், நைவேத்தியம், தாம்பூலம், தூபம், தீபம், ஆராத்திரிகம், பஸ்மம், சுளுகோ தகம் என்பவற்றை ஷோடசோபசாரம் எனலுமாம்.

ஆசனம், ஆவாகனம், பாத்தியம், ஆசமனம், அர்க்கியம், ஸ்நானம், வஸ்திரம், கந்தம், புஷ்பம், நைவேத்தியம், என்பன தசோபசாரமாம்.

கந்தம், புஷ்பம், நைவேத்தியம், தூபம், தீபம், என்பன பஞ்சோபசாரம் எனப்படும்.

# XXIII. பாத்தியாசமனாதிகளின் ஞானார்த்தம்

சிவபெருமானுடைய திருவடிகளிலே பொருந்துவதற் கறிகுறியாகவே பாத்தியமும், அருட்டிருமுகத்திலே பொருந்துவதற் கறிகுறியாகவே ஆசமனமும், பரை யதீதமாகிய திருமுடியிற் பொருந்துவதற்கறிகுறியாகவே அர்க்கியமும், மோக்ஷவின்பத்தை அடைவதற்கறிகுறியாகவே புஷ்பமும், ஆன்மாவின் மலத்தைச் சுத்தி செய்தற்கறிகுறியாகவே திருமஞ்சனமும், அஞ்ஞான வாசனையை நீக்குதற்கறிகுறியாகவே தூபமும், அவ்வஞ்ஞானம் நீங்கியவிடத்து விளங்கும் ஞானத்துக்கு அறிகுறியாகவே தீபமும், மனசிலே அன்பு உண்டாகுமாறு தற்போதத்தை நீக்குதற் கறிகுறியாகவே நைவேத்திய முகவாசமும், சிவபெருமானுக்கு உபசாரமாகச் செய்யப்படும்.

இவ்வுண்மை

“பாத்தியா சமனார்க்கியம் பழுதக
லான்மசுத்தி நிமித்தமாகவு
நறுமலரதனை நல்வீட்டின்பங்
குறுகுதலேது வாகவுங்கொடுத்து
நிகழ்மல சுத்தி நிமித்தமாக
மகிழ்வுடனே திருமஞ்சனம் பண்ணி
ஞான விளக்க நண்ணுதற் பொருட்டுத்
தூபதீபந்துதைந்தினி தளித்து
பின்மன மமைவு பிறத்தற் பொருட்டு
நைவேத்திய முகவாசமு நல்கி”

என்னும் சதாசிவரூப சூத்திரங்களால் அறியப்படும்.

(43) நிமொுவநஞு ஶ்ரீமம்யொ சம்சதாுமஃ வுஸ நகூழ் ।
வு ஜக்ஷிணஞு ஸவுது வாவிகூம் ஸஹஶம் ஹா நா ।
ஸஶிதூஜூ ஸம்யொமாஜ்ஜுூம் ஸஜாஸம் யயா ।
தயாதூ ஶிவயொயெுாமெ நஜக்ஷாஃ வுகீதுுதெ ॥

நிர்லேபநஞ்ச ஸ்ரீகந்தோ துவந்துவதியாகபிரசூநகம் |
பிரதக்ஷிணஞ்ச சர்வத்ர வியாபித்வம் சஹசம்புநா |
சரித்சமுத்ரசம்யோகாஜ்ஜலம் சமரஸம் யதா |
ததாத்மசிவயோர் யோகே நமஸ்கார : பிரகீர்த்யதே|

"[பிரபஞ்ச] வைராக்கியமே கந்தம் என்றும், துவந்துவங்களை விடுதலே புஷ்பம் என்றும், சம்புவாகிய சிவனாரோடு கூட [அருள்வாயிலாக] யாண்டும் வியாபித்தலே பிரதக்ஷிணம் என்றும், நதியானது சமுத்திரத்தோடு சேர்ந்து சமரசமாயிருத்தல் போல ஆன்மா சிவத்தோடு சேருங்கால் [அவ்வான்மா சிவசாமிய குணமுற்றிருத்தலே] நமஸ்காரம் எனப்படும்" என்றும் ஸ்ரீகாலோத்தராகமங் கூறுகின்றது.

## XXIV. அந்தரியாகபூசை

புறப்பூசை செய்யுங்கால் அந்தரியாக பூசை அவசியம் செய்ய வேண்டும் என்பது பற்றியே இருக்குவேதம்

(44) ஃஞஸரிச்ச்ஷி தං ஜநெ ரு ஃஷ்ரு ஂ வரொ
உநீஷயா ஏரூஷி ஜிஹ்வயாஸஸம் ॥

அந்தரிச்சந்தி தம் ஜநே ருத்ரம் பரோ
மநீஷயா கிருப்ணந்தி ஜிஹ்வயா சசம் ||

"சனங்களிடத்து அந்தரியாமியாய் நிற்கும் பரனாகிய அந்தச் சிவபெருமானைச் சிவசக்தியோடு கூட அகத்திற் பற்றுகின்றவர்களே அன்னத்தை நாவினாற் கிரகிக்கின்றார்கள்" என்று கூறுகின்றது. இம்மந்திரத்துக்கு உபப்பிருங்கணமாகிய பராசரபுராணம்.

(45) ஃஞஸரிச்ச்ஷி யெரு ஃஷ்ரு ஂ ஸஷாவரு ஂ உநீஷயா ।
ஏரூஷி ஜிஹ்வயா தெஹி ஸவ ணபூாஉரதொஆகுழ।
ஃஞஸஞெபூச்ஷி யெரு ஃஷ்ரு ஂ ஹவாநீ ஸஹிதம் ஶிவழ।
வரீஷஉெவ ஏரூஷி ஜிஹ்வயா தெந ஸம் ஶய ஃ॥

அந்தரிச்சந்தி யே ருத்ரம் சதா வந்தியம் மநீஷயா |
கிருஹ்ணந்தி ஜிஹ்வயா தேஹி ரசபூர்ணாம் ருதோதகம்|
அந்தர் நேச்சந்தி யே ருத்ரம் பவாநீ சஹிதம் சிவம் |
புரீஷமேவ கிருஹ்ணந்தி ஜிஹ்வயா நசம்சய: ||

"எவர் அருட்சத்தியாரோடு கூட வந்திக்கற் பாலராகிய சிவபிரானை எக்காலமும் உள்ளே விரும்புகின்றாரோ, அவர் இரச நிறைந்த அமிர்தோதகத்தை நாவினாற் கிரகிக்கின்றார் ; எவர் பவானியாம் சத்தியாரோடு கூட அச்சிவபெருமானை உள்ளே விரும்பவில்லையோ, அவர் மலத்தையே சந்தேகமின்றி நாவினாற் கிரகிக்கின்றார்'' என்று கூறுகின்றது.

அந்தரியாக பூசைசெய்யுமிடத்து நாபியினின்றும் தோன்றிய எண் விரல் அளவினதாகிய தாமரையின் நாளத்தைப் பிருதிவியாகிய நிவிர்த்தி கலாரூபமாகவும், அத்தாமரையின் எட்டிதழ்களையும் அப்பு முதலிய இருபத்துமூன்று தத்துவமாகிய பிரதிஷ்டா கலா ரூபமாகவும், கேசரங்களை வித்தியா தத்துவமாகிய வித்தியா கலாரூபமாகவும், பொகுட்டைச் சுத்த வித்தை ஈசுரம் சாதாக்கியமாகிய சாந்திகலா ரூபமாகவும், வித்துக்களை விந்து நாதங்களாகிய சாந்தியாதீத கலாரூபமாகவும் கோடலால், முப்பத்தாறு தத்துவமும் ஆசனமாய் நிற்ப, இதற்குமேல் "தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்" என்றவாறு, சிவபிரானை உயிராகக்கொண்ட ஆன்மாவை லிங்கமாவுங் கொண்டு பூசித்தல் அந்தரியாக பூசையாகும். இது பற்றியே திருநாவுக்கரசுவாமிகள்

காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமையவாட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே

என்று அருளிச்செய்தார். ஈண்டு மனம் என்றது ஆன்மாவுக்குப் பெயராகக் கொண்டு. ஆன்ம லிங்கமே மனமணிலிங்கமாகச் சொல்லப்பட்டதெனக் கொள்க. இவ் விருக்குவேத மந்திரத்தினும்

இதன் உபப்பிருங்கணமாகிய சிவாகமங்களினும் கூறப்பட்ட அந்தரியாக பூசையைச் சிவஞானசித்தியார்,

அந்தரியா கந்தன்னை முத்திசா தனமா
யறைந்திடுவ ரதுதானு மான்மசுத்தி யாகுங்
கந்தமலர் புகையொளிமஞ் சனமமுது முதலாக்
கண்டனவெல் லாமனத்தாற் கருதிக் கொண்டு
சிந்தையினிற் பூசித்துச் சிவனைஞா னத்தாற்
சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவியர னுளத்தே
வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே

என்று கூறிற்று. இங்ஙனம் அந்தரியாகத்திலே பூசிக்குமிடத்து பிருதிவி பீஜத்தை உச்சரித்து,

(46) 𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌵𑌂 𑌗𑌨𑍍𑌧𑌪𑍁𑌷𑍍𑌪𑌾𑌦𑍍𑌯𑌂 𑌕𑌨𑍍𑌦𑌮𑍂𑌲𑌫𑌲𑌾𑌦𑌿𑌕𑌮𑍍।
பார்த்திவம் கந்தபுஷ்பாத்யம் கந்தமூல பலாதிகம்.

"பிருதிவிக்குரிய கந்தம், புஷ்பம், கந்தமூலம், பழ" முதலிய கொண்டும், அப்பு பீஜத்தை உச்சரித்து,

(47) 𑌆𑌪𑍍𑌯𑌂 𑌵𑌾𑌰𑌿𑌪𑌯𑍋𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌦𑌧𑌿𑌗𑍋𑌮𑍂𑌤𑍍𑌰𑌕𑌾𑌦𑌿𑌕𑌮𑍍।
ஆப்யம் வாரிபயோ வஸ்திரம் ததிகோமூத்திரகாதிகம்.

"அப்புவுக்குரிய ஜலம், பால், வஸ்திரம், தயிர், கோசல" முதலிய கொண்டும், அக்கினி பீஜத்தை உச்சரித்து,

(48) 𑌆𑌗𑍍𑌨𑍇𑌯𑌂 𑌹𑍇𑌮𑌰𑌤𑍍𑌨𑌾𑌦𑌿 𑌦𑍀𑌪𑌮𑌾𑌭𑌰𑌣𑌾𑌦𑌿𑌕𑌮𑍍 ॥
ஆக்நேயம் ஹேமரத்நாதி தீபமாபரணாதிகம்.

"அக்கினிக்குரிய சுவர்ணம், இரத்தினம், தீபம், ஆபரண" முதலிய கொண்டும் வாயு பீஜத்தை உச்சரித்து,

(49) 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌂 𑌚𑌾𑌮𑌰𑌂 𑌧𑍂𑌪𑌂 𑌵𑍍𑌯𑌜𑌨𑌂 𑌤𑌾𑌲𑌵𑍃𑌨𑍍𑌤𑌕𑌮𑍍 ॥
வாயவ்யம் சாமரம் தூபம்வியஜநம் தாலவிருந்தகம்.

"வாயுவுக்குரிய சாமரம், தூபம், விசிறி, ஆலவட்ட" முதலிய கொண்டும், ஆகாயபீஜத்தை உச்சரித்து,

(50) நாஹஸம் ஜெயவாஜூாஜூ° வீணாவெண-
ஸுராஜிகஜ் ||

நாபஸம் கேயவாத்யாத்யம் த்யம் வீணாவேணு
ஸ்வராதிகம் ||

"ஆகாயத்துக்குரிய கானத்தோடியைந்த வாத்தியம், வீணை, வேய்ங்குழன்" முதலிய கொண்டும் மானசிகமாகச் சிவபிரானை ஆன்ம லிங்கத்திற்கு பூசிக்க.

இங்ஙனம் மேலே கூறியவாறு வேதசிவாகம புராணேதிகாசங்களிற் பிரதிபாதிக்கப்பட்ட சிவலிங்கப் பெருமானை அகத்தும், புறத்தும் வழிபடாதவர் செனன மரணத்துக் காளாகின்றார் என்பதையுற்று ஸ்ரீவாகீசப்பெருந்தகையார்,

திருநாம மஞ்செழுத்துஞ் செப்பா ராகிற்
றீவண்ணர் திறமொருகாற் பேசாராகி
லொருகாலுந் திருக்கோயில் சூழா ராகி
லுண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணாரகி
லருநோய்கள் கெடவெண்ணீ றணியாராகி
லளியற்றார் பிறந்தவா றேதோ வென்னிற்
பெருநோய்கண் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்றாரே

என்று அருளிச்செய்தார்.

## உபந்நியாச சங்கிரகம்

இதுகாறுங் கூறிய உபந்நியாசத்தின் சங்கிரகம் என்னையோ எனின், எத்துணைக்கால மென்று வரையறுக்கப்படாத காலத்திலே உள்ள வேதாகமங்களிற் சிவலிங்கோபாசனை பிரதிபாதிக்கப்பட்ட தொன்றாமாதலின், ஆரிய சமாஜத்தினரும் பிரமசமாஜத்தினரும், மூர்த்தியுபாசனை கூடாதென்று தவிர்த்தல் பழுதாம் என்பதும்,

லிங்கதாது அர்த்தத்தினாற் சிவபெருமானது சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்கள் விளக்கப்பட்டன என்பதும், பிரபஞ்சமனைத்தும் சிவலிங்க வடிவே என்பதும், பசுவிலே பால் யாண்டும் வியாபித்திருப்பினும் அதன் மடிவாயிலாகவே பால் பெறப்படுதல் போலச் சிவபெருமான் யாண்டும் நீக்கமற வியாபித்திருந்தாரேனும் அவர் சைல முதலிய லிங்க, ஆன்மலிங்கவாயிலாகவே வெளிப்படுகின்றாரென்பதும், ஸ்தூலோபாசனை இன்னது என்று விவேகித்து அறியமாட்டாது, சூக்கும உபாசனையினும் விக்கிரகாராதனையே புரியும் புறச்சமயத்தார் புறத்தினாலும், அகத்தினாலும் ஸ்தூலோபாசனை சூக்குமோபாசனை என்னும் இருவழிபாடு செய்யும் வைதிக சைவ சமயிகளை விக்கிரகாராதனைக்கார ரென்று நிந்தித்தல் நீதியன்றாம் என்பதும், கை, கால் உறுப்புகள் விளங்கும் விக்கிரகங்களை வழிபடுதலினும் சிவலிங்க வழிபாடு மிகு சிரேஷ்டமாம் என்பதும், மணிமந்திர ஔஷதம் என்னும் மூன்றனுள்ளே சிவலிங்க வழிபாடு மணி எனப்படும் என்பதும், ஆன்மாக்களுக்கு அநுக்கிரகிக்குமாறே சிவபிரான் மூர்த்தி தலம் தீர்த்தமாய் நிற்கின்றார் என்பதும், லிங்கமானது பாணமுதலிய பல திறந்ததாயுள்ளதென்பதும், சிவபிரான் புறத்தே சைலமுதலியவற்றையும், அகத்தே ஆன்மாவையையும் இடமாகக் கொண்டா ரென்பதும், அச்சிவலிங்கங்கள் பின்னரும் சுயம்பு லிங்க முதலிய பல திறத்தனவாயுள்ளன என்பதும், சோதிலிங்கங்கள் இவை இவை என்பதும், ஷடாதார க்ஷேத்திரங்கள் யாவை என்பதும், ஷடாதாராதீத க்ஷேத்திரம் யாது என்பதும், சரியை முதலிய நான்கு பாதத்தினரும் சிவபெருமானை எங்ஙனம் வழிபடுகின்றாரென்பதும், மனுஸ்மிருதியிற் கூறப்பட்ட பிரகாரம் அந்தணர் பூசிக்கும் ஆதித்தியன் முதலிய ஐவருள்ளும் சிவபெருமானே அதர்வசிகையிற் கூறியாங்கு விசேஷித்துப் பூசிக்கற்பாலர் என்பதும், சிவபெருமான் விஷ்ணு பிரமா முதலியோரை யாண்டாயினும் ஸ்தாபித்துப் பூசித்ததாகப் புராண இதிகாசங்களிலேனும் அநுபவத்திலேனும் இல்லாது போக,

சிவலிங்கப் பெருமானையே பிரமவிஷ்ணுவாதி தேவர்கள் ஸ்தாபித்து அநேக க்ஷேத்திரங்களிற் பூசித்தமையே அப்பிரமாதி தேவர்களினும் சிவபெருமான் தலையாயினர் என்றமைக்குப் போதிய சான்றாம் என்பதும், அங்ஙனம் பிரமா விஷ்ணு முதலிய தேவர்களெல்லாம் இன்ன இன்ன ஸ்தலங்களிற் பூசித்து வழிபட்டு வேண்டிய வேண்டிய பயன்கள் அடைந்தாரென்பதும், லிங்காராதனை பரார்த்தபூசை ஆன்மார்த்தபூசை என இருவகைப்படும் என்பதும், சிவலிங்கம் சிவசாதாக்கிய முதலிய ஐந்தனுள் ஒன்றாகிய கன்மசாதாக்கிய வடிவாமென்பதும், பரார்த்தபூசை இவனது என்பதும், ஆன்மார்த்தபூசை இன்னது என்பதும், அச்சிவலிங்கப் பெருமானை வழிபடுங்காற் செயப்படும் ஷோடசோபசாரம், தசோபசாரம், பஞ்சோபசாரம் என்பன யாவை என்பதும், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், மஞ்சனம், என்னும் ஐந்தின் ஞானார்த்தங்கள் யாவை என்பதும், சிவலிங்கப் பெருமான் புறத்திலேபோல அகத்திலும் மானசிகமாக வழிபடுமுறைமை இன்னது என்பதுமேயாம்.

## சைவசித்தாந்தம்

மாறினேன் சமயபேதவழிப்படும்புன்மையெல்லாந்
தேறினேன்வீடுசேர்க்குஞ்சைவசித்தாந்தமென்றே
யேறினேன்சிவலோகத்தேயிரண்டறக்கலந்தொன்றாகி
யாறினேன்வருத்தமெல்லாங்கலைசைக்கோவருளினாலே,

- மெய்கண்டசுவாமிகள்

திங்களொடு கங்கைபுனையங்கணனார் செப்புதிரும் வளினோடு
தங்குருவாம் பரஞ்சோதிமுனிவனினிதலை குறிப்புந்தகவாக்கொண்டு
துங்கமுறு சிவஞானபோதமும் வார்த்திகப்பொழிப்புஞ்சுழிப்புநீர்சூழ்ந்
திங்கமருந்தமிழ்காடு வீடுபெறப்புரிகுரவரிருதாள் போற்றி.